# புதுமைத் தமிழ் வாசகம்

4/1-63.

நான்காம் வகுப்பிற்குரியது

ஆசிரியர் :

வித்வான் [illegible]. பெரியசாமிப் பிள்ளை







[illegible] கோபால் பிள்ளை
[illegible] பதிப்பாளர்
[illegible]குளம் | 2/27, பிராட்வே
[illegible]ராப்பள்ளி | சென்னை-1

# முன்னுரை

இப் புதுமைத் தமிழ் வாசக வரிசை புதுவதாக அரசியலாரால் அமைத்து 25-12-1957இல் வெளியிடப் பெற்ற பாடத் திட்டத்திற் கிணங்க எழுதப்பட்டது. இவ் வரிசையில் இப்புத்தகம் நான்காம் வகுப்பிற்கென அமைந்ததாகும்.

இதனுள் இவ்வகுப்பிற்கேற்ற வண்ணம் நடை சிறிது சிறிதாக உயர்த்தப்பட்டுள்ளது. மாணவர்களின் அறிவு வளர்ச்சிக்கேற்ற நகைப்பு, வியப்பு ஆகிய சுவைகள் மிகுந்த கதைகளும், கடிதம் எழுதுதல், உல்லாசப் பிர யாணம் பற்றியும், பலவகைப் பாடல்களும், பாடங்களாக அமையப்பெற்றுள்ளன. இறுதியாக தேசிங்கு ராசன், கட்டபொம்மன் பாடல், நல்வழி, நீதி வெண்பா, சதகச் செய்யுள் முதலியன சேர்க்கப்பட்டுள்ளன.

ஆதலால், இந்நான்காம் வகுப்புப் புத்தகம் இளஞ் சிறுர்களுக்குத் தாய் மொழியில் நல்ல பயிற்சியும் நுண் ணறிவும் நல்ல பழக்க வழக்கமும் உண்டாதற்கு மிகுதியும் பயன்படுமென நம்புகின்றேன்.

மா. பெரியசாமிப் பிள்ளை,
ஆசிரியர்.

# பொருளடக்கம்


| எண் | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | செந்தமிழ் நாடு | ... | 1 |
| 2. | ஔவையாரின் வாழ்த்துமொழி | ... | 3 |
| 3. | சென்னைக் கடற்கரை | ... | 6 |
| 4. | குரங்கின் அச்சம் | ... | 9 |
| 5. | மூவகை மக்கள் | ... | 10 |
| 6. | கைத்தொழிற் பொருட்காட்சி | ... | 13 |
| 7. | கிளிக்கண்ணி | ... | 17 |
| 8. | மயிலுக்குப் போர்வை ஈந்த வள்ளல் | ... | 18 |
| 9. | மதுரை மாநகரம் | ... | 21 |
| 10. | புரு | ... | 25 |
| 11. | தருமதத்தனும் இரசவாதியும் | ... | 26 |
| 12. | நெய் வகைகள் | ... | 29 |
| 13. | உத்தமன் காந்தி | ... | 33 |
| 14. | பகைவனையும் மன்னித்தல் | ... | 34 |
| 15. | பென்சில் சொல்லிய கதை | ... | 37 |
| 16. | ஆசிய சோதி | ... | 41 |
| 17. | கரிகாலன் அரசெய்தல் | ... | 43 |
| 18. | மாணவர் சங்க ஆண்டு விழா | ... | 47 |
| 19. | கப்பலோட்டிய தமிழன் நினைவு | ... | 50 |
| 20. | மல்லனை வென்ற தெனாலி ராமன் | ... | 51 |
| 21. | கரும்பு | ... | 55 |

| எண் | | பக்கம் |
|---|---|---|
| 22. | பெண்ணின் உரிமைகள் ... | 60 |
| 23. | தாகூரின் இளகிய நெஞ்சம் ... | 61 |
| 24. | ஒரு மானின் தியாகம் ... | 65 |
| 25. | வழிப்போக்கன் ... | 69 |
| 26. | கப்பலோட்டிய தமிழன் ... | 71 |
| 27. | பேசிய குகை ... | 75 |
| 28. | குழந்தையின் தோத்திரம் ... | 78 |
| 29. | குருடரும் முடவரும் ... | 79 |
| 30. | ஜேம்ஸ் வாட் ... | 83 |
| 31. | விக்கிரமாதித்தனின் அரியணை ... | 87 |
| 32. | இளம் புலவனைக் காத்த பெரும் புலவர் ... | 91 |
| 33. | தேசிங்கு ராசன் கதை ... | 96 |
| 34. | கட்டபொம்மன் பாடல் ... | 99 |
| 35. | நல்வழி ... | 103 |
| 36. | நீதி வெண்பா ... | 106 |
| 37. | சதகச் செய்யுள் ... | 109 |

# தேசீய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா,

விந்த்ய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா,

தவசுப நாமே ஜாகே,
தவசுப ஆசிஷ மாங்கே

காயே தவ ஜய காதா,

ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா,

ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய, ஜயஹே!

## தேசீய கீதத்தின் பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி
செலுத்துகிறுய்.

நின் திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது ;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில்
கலக்கிறது ;
இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன ; நின் புகழைப்
பாடுகின்றன ;

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

# புதுமைத் தமிழ் வாசகம்

## நான்காம் வகுப்பு

---

## 1. செந்தமிழ் நாடு

செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே— ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே. (1)

காவிரி தென் பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருநைநதி—யென
மேவிய யாறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு. (2)

நீலத் திரைகட லோரத்திலே—நின்று
நித்தந் தவஞ்செய் குமரியெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு. (3)

கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசும் தமிழ்நாடு. (4)

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளுஞ் சிலப்பதி காரமென் றோர்—மணி
யாரம் படைத்த தமிழ்நாடு. (5)

—பாரதியார்

| | | | |
|---|---|---|---|
| திரு | அள்ளும் | பாரெங்கும் | மணியாரம் |
| தவம் | திரைகடல் | வான்புகழ் | நீள்வரை |
| மேவிய | சாத்திரம் | | |

## வினுக்கள்

1. தமிழ் நாட்டில் ஓடும் ஆறுகள் எவை ?

2. முற்காலத்தில் தமிழ் நாட்டின் வடக்கு எல்லே எது? தெற்கு எல்லே எது ?

3. தமிழ் நாட்டில் விளங்கிய சில புலவர்களேக் கூறு.

## 2. ஔவையாரின் வாழ்த்துமொழி

குலோத்துங்க சோழன் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டு கட்குமுன் வாழ்ந்தவன். சிலகாலம் உறையூரைத் தலை நகராகக்கொண்டு ஆண்டு வந்தான். அவன் ஆட்சியில் நாடு சீரும் சிறப்பும் பெற்றிருந்தது. சோழர் குலத் துக்கும் நற்புகழ் ஏற்பட்டது. 'குலோத்துங்கன்' என்றால் குலத்தை மேம்படுத்தியவன் என்பது பொருள். இவன் நன்கு அரசாண்டதுடன், தமிழ்மொழியையும், புலவர்களையும் போற்றினான். கம்பர், புகழேந்தி, ஒட்டக் கூத்தர், ஔவையார் முதலிய புலவர்கள் இவனால் பெரிதும் போற்றப்பட்டார்கள்.

அவ்வேந்தனுக்கு முடிசூட்டு விழா நடைபெற்றபோது நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி ஆழ்ந்த கருத்துடையது.

குலோத்துங்க சோழனுக்கு முடிசூட்டுவிழா சிறப்பாக நிகழ்ந்தது. விழாவுக்குப் பல அரசர்களும், செல்வர் களும், புலவர்களும் வந்திருந்து சிறப்பித்தனர். அவரவர் இயல்புக்குத் தகுந்தபடி, மன்னனை வாழ்த்தினர். அங்கு வந்திருந்த புலவர்களெல்லாம் அரசனுக்கு வாழ்த்துரை கூறினர். ஆனால், ஔவையார் மட்டும் ஒன்றும் கூற வில்லை. அதைக் கண்ட புலவர்கள் ஔவையாரை நோக்கி, "அம்மையாரே, நீங்கள் மன்னனுக்கு வாழ்த்துக் கூற வேண்டாவோ?" எனப் பணிந்து கேட்டனர். உடனே ஔவை மூதாட்டியார், "வரப்புயர!" என்று மட்டும் மொழிந்தார்.

ஔவையார் "வரப்புயர" என்று கூறியதன் கருத்தை அறியாத புலவர்கள் வாழ்த்துக் கூறும்படி அவரை மீண்டும் வேண்டினார்கள். அவர் முன்போலவே "வரப்புயர!" என வாழ்த்தினார். புலவர்கள் அப் பொழுதும் அச்சொல்லின் கருத்தை ஆழ்ந்து நோக்கினா

ரல்லர். ஆதலின் அவர்கள் அரசனை வாழ்த்துமாறு மூன்றும் முறையாக மன்றுடிக் கேட்டுக்கொண்டனர். அப்பொழுதும் ஔவையார், "வரப்புயர" என்றே கூறினர்.

புலவர்களுக்கோ ஔவையார் கருத்து விளங்கவில்லை; இன்னது செய்வதென்றும் புரியவில்லை. இந்நிலையில் அவர்கள் அவரை நோக்கி, "அம்மையாரே, மும்முறையும் வரப்புயர என்று சொன்னீர்களே; அதன் கருத்தை விளக்கியருள்க," என்றனர். அதற்கு ஔவையார், "யான் 'வரப்புயர' என்பதனுல் குலோத்துங்க மன்னனை எனது மனமார வாழ்த்தினேன். உங்களுக்கு அச் சொல்லின் பொருள் விளங்கவில்லையாயின், இதோ விளக்குகின்றேன்; கேளுங்கள்."

"'வரப்புயர' என்றுல் 'வரப்புகள் உயர்க' என்பது பொருள். இதனுல் வயல்களின் வரப்புகள் உயர வேண்டும் என வாழ்த்தியதாயிற்று. இப்படி வரப்புகள் உயர்ந்தால் வயல்களில் நீர் உயர்ந்து நிற்கும். நீர் நிரம்பி உயர்ந்து நின்றுல் நெல் உயரும்; நெற்பயிர் உயர்ந்து நிரம்பக் கதிர்விட்டால் குடி உயரும்; குடிமக்கள் உயர்ந்து நல்வாழ்வு நடத்தினுல் கோல் உயரும்; செங்கோ லாட்சி உயர்ந்தால் கோன் உயர்வான். இங்ஙனம் அரசனது நல்லாட்சிக்கும், புகழுக்கும், பெருமைக்கும் பயிர்த்தொழிலே காரணமாதலால் நமது கோனுகிய குலோத்துங்க மன்னன் அத்தொழிலைப் போற்றி வயல் வளத்தைப் பெருக்குவானுக என்னும் கருத்துடன் 'வரப்புயர' என வாழ்த்தினேன்" என்றுர் ஔவையார்.

அதைக்கேட்ட புலவர்களெல்லாரும் மிக்க மகிழ்ச்சியும் வியப்பும் கொண்டு ஔவையாரின் கூர்த்த மதிக்காக அவரைப் போற்றிப் புகழ்ந்தனர்.

| | | | |
|---|---|---|---|
| சீரும் சிறப்பும் | கூர்த்த | ஆழ்ந்து | மனமார |
| மேம்படுத்தியவன் | பணிந்து | நோக்கினுர் | கோல் |
| முடிசூட்டு விழா | மூதாட்டி | மதி | கோன் |
| சிறப்பித்தனர் | மீண்டும் | விளக்கியருள்க | வியப்பு |
| வாழ்த்துரை | | | |

### வினுக்கள்

1. குலோத்துங்க சோழன் எக்காலத்தில் தமிழ் நாட்டினை ஆண்டான்?
2. குலோத்துங்கனுல் போற்றப்பட்ட பெரும் புலவர்கள் யாவர்?
3. முடிசூட்டு விழா என்ருல் என்ன?
4. ஔவையார் குலோத்துங்கனை எவ்வாறு வாழ்த்தினுர்?
5. ஔவையார் கூறிய வாழ்த்து மொழியின் கருத்தை விளக்கிக் கூறு.

### பயிற்சி

1. அ, ஆ, ஒ, ஓ, ஐ, ஏ, கா, சே, து—இவ்வெழுத்துக் களின் உச்சரிப்பைக் கவனி. சில எழுத்துக்கள் குறுகிய ஓசை யுடையவை. சில எழுத்துக்கள் நீண்ட ஓசையுடையவை. எந் தெந்த எழுத்துக்கள் குறுகிய ஓசையுடையவை, எவை யெவை நீண்ட ஓசையுடையவை என்று கவனித்துச் சொல்லு.

குறுகிய ஓசையுடைய எழுத்து குற்றெழுத்து அல்லது குறில் என்று சொல்லப்படும்.

2. உயிர் எழுத்துக்களில் எந்தெந்த எழுத்துக்கள் குறுகிய ஓசையுடையவை என்று கவனித்துச் சொல்.

3. க, கா.........என்ற வரிசையில் குறுகிய ஓசையுடை யவை எவை? நீண்ட ஓசையுடையவை எவை?

4. இம்மாதிரியே உயிர்மெய் எழுத்துக்களில் உள்ள குற் றெழுத்துக்கள் எத்தனை; நெட்டெழுத்துக்கள் எத்தனை என்று எண்ணிச் சொல்லு.

5. மேழி, ஆசை, ஐயா, ஒலி, ஔவை—இவ்வார்த்தைகளி லுள்ள உயிர்க் குற்றெழுத்துக்கள், உயிர் நெட்டெழுத்துக்கள், உயிர் மெய்க் குறில், உயிர் மெய் நெடில் இவற்றைக் கூறு.

## 3. சென்னைக் கடற்கரை

திருச்சி,
20–6–58.

அன்புள்ள சேதுராமனுக்கு,

சென்ற கோடை விடுமுறைக்கு என் தந்தை என்னைச் சென்னைக்கு அழைத்துக்கொண்டு போனார். அங்கே பத்து நாட்கள் இருந்தேன்; பல இடங்களைப் பார்த்து மகிழ்ந்தேன். அவை உயர் நீதி மன்றம், கலங்கரை விளக்கம், நகரசபைக் கட்டடம், மிருகக் காட்சிசாலை, பொருட் காட்சிசாலை, கன்னிமரா நூல் நிலையம் முதலியனவாகும். சிலநாட்கள் மாலை நேரங்களில் என் தந்தை என்னைக் கடற்கரைக்கும் அழைத்துப்போனார்.

சென்னைக் கடற்கரை உலகிலேயே அழகான கடற் கரைகளில் இரண்டாவதெனப் பெயர் பெற்றுள்ளது. கடற்கரையை ஒட்டித் துறைமுகத்திலிருந்து நீளமான ஒரு சாலையை நகரசபையார் போட்டிருக்கிறார்கள். இதன் நீளம் சுமார் மூன்று மைல்களாகும். மாலை நான்கு மணி யானதும் எறும்புகள் ஊர்ந்து போவதுபோலப் பல நிறங் களில் மோட்டார் வண்டிகள் வந்துவிடும். நாங்கள் கடற் கரைக்குப் பக்கத்திலுள்ள திருவல்லிக்கேணியில் தங்கி யிருந்தோம். திருவல்லிக்கேணிக் கடற்கரைக்கு 'மெரீனா கடற்கரை' என்று பெயரிட்டிருக்கிறார்கள். இங்கேதான் அரசாங்கக் கல்லூரிக் கட்டடம் அமைந்திருக்கிறது.

மெரீனா கடற்கரையில் மிகப் பரந்தவொரு மணற் பரப்பு உள்ளது. இங்கே நகரசபையார் பல விளையாடு மிடங்களைச் சிறுவர்களுக்கும், பெரியவர்களுக்கும் தனித் தனியே ஏற்படுத்தியிருக்கிறார்கள். விளையாடுவதற்குக் கால்பந்து, பூப்பந்து போன்ற பொருள்களையும் தருகிறார்

கள். விருப்பமானவர்கள் யாவரும் இங்கு விளையாடி மகிழலாம். ஓரிடத்தில் சிலர் 'சடுகுடு' விளையாடிக் கொண்டிருந்தார்கள். நானும் சேர்ந்துகொண்டு விளை யாடிக் களித்தேன்.

மெரீனு கடற்கரையில் அரசாங்கத்தார் ஒரு நூல் நிலையத்தையும், மீன்காட்சிச் சாலையையும் அமைத்திருக் கிருர்கள். தந்தை என்னை மீன்காட்சிக்குக் கூட்டிப் போனுர். பற்பல நிறங்களில் சிறு மீன்கள் முதல் பெரிய மீன்கள் வரை எல்லாம் பார்க்க அழகாக இருந்தன. சென்னைப் பல்கலைக்கழகக் கட்டடத்தையும் அங்குள்ள நூல் நிலையத்தையும் கண்டு மகிழ்ந்தேன்.

மெரீனுவின் நடுவில் ஓரிடத்தில் 'வானொலி' நிகழ்ச்சி களை ஒலிபெருக்கி மூலம் பரப்புகிருர்கள். பகலெல்லாம் வேலைசெய்து களைத்தவர்கள் கடற்கரைக்கு வந்து குளிர்ந்த காற்றினுல் களைப்பு நீங்குகிருர்கள்; பாட்டு, நாடகம் போன்றவைகளைக் கேட்டு மனமகிழ்கிருர்கள்.

நண்பா! இன்னும் ஒன்றை எழுதிக் கடிதத்தை முடிக் கிறேன். கடற்கரையில், வேர்க்கடலை, பட்டாணிக்கடலை விற்கும் காட்சியைக் கட்டாயம் பார்க்கவேண்டும். ஓரணு வுக்குக் கடலை வாங்கி ஒவ்வொன்ருக கொறித்துக் கொண்டே காற்று வாங்கினுல் மிக்க ஆனந்தமாயிருக்கும்.

நீயும் உன் தந்தையும் அடுத்த விடுமுறைக்குச் சென்னைக்கு வாருங்கள்; கடற்கரையைக் கட்டாயம் பாருங்கள்!

உன் அன்பன்,

மணியன்.

திரு. என். சேதுராமன்,

2, புகழேந்திப் புலவர் வீதி,

மதுரை.

| | | | |
|---|---|---|---|
| உயர்நீதி மன்றம் | விடுமுறை | துறைமுகம் | வானொலி |
| கலங்கரை விளக்கம் | நகரசபை | கல்லூரி | கொறித்து |
| பல்கலைக் கழகம் | நூல் நிலையம் | கால்பந்து | களைப்பு |
| பட்டாணிக் கடலை | காட்சிச்சாலை | பூப்பந்து | மனமகிழ் |

### வினாக்கள்

1. சென்னைக் கடற்கரை என்ன புகழ் பெற்றுள்ளது?

2. மாலையில் மெரீனா கடற்கரையில் என்ன என்ன காணலாம்?

3. நீ சென்று பார்த்த ஒரு புதிய ஊரைப்பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

### பயிற்சி

1. வாக்கியங்கள் முடிகிற இடத்தில் முற்றுப்புள்ளி என்னும் குறி வைக்கப்படும் என்று முன் வகுப்பில் படித்தீர்கள். புத்தகங்களில் இன்னும் வேறு பலவித நிறுத்துக் குறிகளையும் பார்க்கலாம்.

காய்ச்சல், தலைவலி, வயிற்றுவலி முதலிய நோய்கள் வந்தவுடனே மருந்து தேடாமல், கொஞ்சம் பட்டினி இருந்து பார்த்துக் குணமாகா விட்டால், பிறகு வைத்தியரைத் தேடலாம்.—இவ்வாக்கியத்தில், (,) இக்குறியைப் பலவிடங்களில் பார்க்கின்றீர்கள். இதற்குக் காற்புள்ளி என்று பெயர். காற்புள்ளி உள்ள இடங்களில் ஒரு மாத்திரை நேரம் நிறுத்தவேண்டும். (மாத்திரை—கண் இமைக்கும் நேரம்.)

கருத்தை நோக்கிச் சிறிது நிறுத்தி வாசிக்க வேண்டிய சொற்களுக்கு இடையிலும் இந்த நிறுத்துக்குறி வைக்கப்படும்.

2. ஔவையார் "வரப்புயர" என்று வாழ்த்தினார். இவ்வாக்கியத்தில் ஔவையார் கூறிய வரப்புயர என்பதை நாம் அவர் கூறியவாறே எடுத்துக் கூறுகிறோம். இம்மாதிரி இடங்களில் " " இக்குறிகள் வைக்கப்படும். இவற்றிற்கு மேற்கோள் குறிகள் என்று பெயர்.

3. பின்வரும் வாக்கியங்களில் காற்புள்ளி, மேற்கோள் குறிகள் ஆகியவைகளைச் சரியானபடி அமைக்க:—

அப்பா இதோ ஒரு கடிதம் வந்திருக்கிறது என்று ஒரு கடிதத்தை எடுத்துக்கொண்டு சுந்தரம் ஓடி வந்தான். தகப்பனார் அதை வாசித்துப் பார்த்து இந்தக் கடிதம் மாமா எழுதியிருக்கிறார் என்று சொன்னார்.



# 4. குரங்கின் அச்சம்

கிளையினிற் பாம்பு தொங்க
விழுதென்று குரங்கு தொட்டு,
'விளக்கினைத் தொட்ட பிள்ளை
வெடுக்கெனக் குதித்ததைப் போல்,'
கிளைதொறும் குதித்துத் தாவிக்
கீழுள்ள விழுதை யெல்லாம்
ஒளிப்பாம்பாய் எண்ணி யெண்ணி
உச்சிபோய்த் தன்வால் பார்க்கும்.

—பாரதிதாசனார்

விழுது வெடுக்கென கிளைதொறும்

விஞக்கள்

1. குரங்கு என்ன செய்தபின் பயந்து ஓடியது ?

2. குரங்கு தன் வாலை ஏன் பாத்துக் கொண்டது ?



## 5. மூவகை மக்கள்

விஜயநகரத்தைக் கிருஷ்ணதேவராயர் என்ற அரசர் சீரும் சிறப்புமாக அரசுபுரிந்து வந்தார். அவர் அப்பாஜி யின் அறிவுத் திறமைக்கு மகிழ்ந்து அவரைத் தம் சபை யில் மந்திரியாக நியமித்தார். அப்பாஜி எப்படிப்பட்ட சிக்கலான கேள்விகளுக்கும் பதிலளித்து விடுவார். எல்லோரையும் திகைக்க வைக்கும் அறிவு பெற்றிருந்தார்.

ஒரு சமயம் தில்லி பாதுஷா அப்பாஜியின் அறிவைச் சோதிக்க நினைத்தார். ஒரே உருவ அமைப்புள்ள மூன்று வெண்கலச் சிலைகளைச் செய்து இராயரது சபைக்கு அனுப்பிவைத்தார். "மூன்று சிலைகளுக்கும் வேறுபாடு கண்டுபிடித்து அந்தச் சிலைகளில் எழுதவேண்டும்; அப்படிச் செய்தால்தான் தென்னாட்டாரின் அறிவை நாங்

கள் போற்றுவோம்,'' என்று கடிதம் எழுதித் தூதர் களிடம் அனுப்பியிருந்தார், பாதுஷா.

இராயர் சபையின் ஓரிடத்தில் சிலைகளை வைத்தார். அவைகளின் தன்மைகளைக் கூறும்படி சபையோருக்குக் கட்டளையிட்டார். சபையிலிருந்தவர்கள் மூளையைக் குழப்பிக் கொண்டனர். அவர்களால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

கடைசியாக அப்பாஜி சிலைகளின் அருகே வந்தார். அவைகளை நன்கு உற்றுப் பார்த்தார். அவற்றின் காது களில் மட்டும் துளைகள் இருப்பதைக் கண்டார். ஒரு மெல்லிய கம்பியை எடுத்து முதல் சிலையின் காதில் நுழைத்தார். அக்கம்பி சிலையின் வாய் வழியாக வெளி வந்தது. இரண்டாம் சிலையின் காதில் கம்பியைச் செலுத் தினர். அது மற்றொரு காதின் துளை வழியாக வெளிப் பட்டது. கடைசியில் மூன்றும் சிலையின் காதின் துளை வழியே கம்பியைச் செலுத்தினர். ஆனால் கம்பி வெளியே வராமல் உள்ளேயே தங்கிவிட்டது.

சிலைகளின் உட்பொருளை அப்பாஜி கண்டுபிடித்து விட்டார். சிலைகளுக்குக் கீழே பின்வருமாறு எழுதி யனுப்பினர்.

முதல் சிலையின் கீழே, "காதால் கேட்டவைகளையெல் லாம் தன் வாயினால் வெளியே சொல்பவன் கடைப் பட்டவன்!'' என்று எழுதினர். இரண்டாம் சிலையின் கீழ், "ஒரு காதில் கேட்டுக் கொண்டு மற்றொரு காது வழியாக விட்டுவிடுபவன் இடைப்பட்டவன்!'' என்று குறிப்பிட்டார். மூன்ருவது சிலைக்கு, "காது கேட்டவை களைத் தன் மனத்துக்குள்ளேயே வைத்துக் கொள்பவன் தலையாயவன்'' என்று எழுதி வைத்தார்.

கிருஷ்ணதேவராயர் அப்பாஜியின் கூரிய அறிவைக் கண்டு வியந்தார். சிலைகளைத் தில்லி பாதுஷாவுக்கு

அனுப்பினுர். தில்லி பாதுஷாவும் அப்பாஜியின் அறிவுக்கு மிக மகிழ்ந்தார்.

| | | |
|---|---|---|
| சீரும் சிறப்புமாக | போற்றுவோம் | கடைப்பட்டவன் |
| சிக்கலான | தூதர் | இடைப்பட்டவன் |
| திகைக்க வைக்கும் | குழப்பிக்கொள் | தலையாயவன் |
| வெண்கலம் | உற்றுப்பார் | நியமித்தார் |
| சிலை | உட்பொருளை | மந்திரி |

### வினுக்கள்

1. அப்பாஜியைக் கிருஷ்ணதேவராயர் ஏன் மந்திரியாக நியமித்தார் ?
2. தில்லி பாதுஷா கிருஷ்ணதேவராயர் சபைக்கு என்ன அனுப்பினுர் ? ஏன் அனுப்பினுர் ?
3. அப்பாஜி, சிலைகளுக்குள் என்ன வேறுபாடுகள் கண்டு பிடித்தார் ?
4. அப்பாஜி, அந்த மூன்று சிலைகளுக்குக் கீழே என்ன எழுதினுர் ?

### பயிற்சி

1. அணில், அவன், அவள், இந்த, இலைகள், உரல், உவ்வீடு—இவ்வார்த்தைகளிலுள்ள முதல் எழுத்துக்களைக் கவனி. அவன், அவள், இந்த, உவ்வீடு என்ற சொற்களில் அ, இ, உ என்ற எழுத்துக்கள் சுட்டிக் காட்டுகின்றன. மற்ற வார்த்தைகளில் அவை சுட்டுப் பொருளில் இல்லை.

அ, இ, உ.—இவ்வெழுத்துக்கள் ஒரு சொல்லின் முதலில் தனித்து நின்று சுட்டுப் பொருளைத் தந்தால், சுட்டெழுத்து எனப்படும்.

2. பின்வரும் வாக்கியங்களில் சுட்டுப்பொருள் உள்ள சொற்களை எடுத்துக் கூறுக.

(1) இவள் உன் தங்கை. (2) உட்பக்கம் செல்.
(3) அவன் யார் ?



## 6. கைத்தொழிற் பொருட்காட்சி

கமலம் : அண்ணா! இங்கே ஏன் சனங்கள் கூட்டமா யிருக்கிறார்கள்?

முருகன் : அதோ, அங்கே என்ன எழுதியிருக் கிறது என்று பார்.

கமலம் : 'கைத்தொழிற் பொருட்காட்சி' என்று எழுதியிருக்கிறது. போய்ப் பார்த்து வருவோமா?

முருகன் : போய்ப் பார்த்து வரலாம். நீ இங்கே சற்று நில். நான் 'டிக்கட்டு' வாங்கி வருகிறேன்.

கமலம் : இதற்குக் கூடவா 'டிக்கட்டு' வாங்க வேண்டும்?

முருகன் : ஆம், ஆனால் கட்டணம் நான்கணாதான். இதோ டிக்கட்டு வாங்கியாயிற்று. உள்ளே போகலாம், வா.

கமலம் : இங்கே வரிசையாகக் கடைகளைத்தானே

பார்க்கிறோம். நம் கடைத் தெருவிலேயே இவைகளைப் பார்க்கலாமே !

முருகன் : அப்படிச் சொல்லிவிடாதே, கமலம் ! இங்கே, சில பொருள்களை எப்படிச் செய்கிறார்கள் என்பதையும் பார்க்கலாம். இதோ, இங்கேயுள்ள பொருள்களைப் பார்.

கமலம் : இங்கே மரத்தினால் செய்யப்பட்ட சிறு தட்டுகள், சிறு பெட்டிகள், சிமிழ்கள், சீப்புகள் எல்லாம் இருக்கின்றன. உள்ளே, சிலர் இந்த மரச் சாமான்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

முருகன் : இந்தக் காட்சிச் சாலையின் சிறப்பு இது தான். மரச்சாமான்கள், தந்தச் சாமான்கள், கண்ணாடிச் சாமான்கள் முதலியவற்றைத் தொழிலாளர்கள் எப்படித் தயார் செய்கிறார்கள் என்பதை நேரில் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம். இதோ, இந்தக் கடையைப் பார்.

கமலம் : இங்கே அழகான தந்தப் பொம்மைகள் இருக்கின்றன. காந்தியடிகளின் இந்த உருவம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. இதை நாம் வாங்கலாமா ?

முருகன் : இன்றைக்கு என்னிடம் போதிய பணமில்லை. நாளைக்கு வந்து வாங்கிக்கொள்ளலாம். இன்று காட்சிச்சாலையைப் பார்க்கும் வேலையை மட்டும் கவனிப்போம். இதோ, இந்தப் பொம்மைகளைப் பார்.

கமலம் : இவைகள் வர்ணம் பூசப்பட்டு அழகாயுள்ளன. இவை எங்கே செய்யப்படுகின்றன ?

முருகன் : இவை பண்டுருட்டி என்ற ஊரில் செய்யப்படுவதால், இவைகளுக்குப் பண்டுருட்டிப் பொம்மைகள் என்று பெயர். இதோ உனக்கு மிகவும் விருப்பமான கடையைப் பார்.

கமலம் : கண்ணாடி வளையல் கடையைச் சொல்கிறாயா ?

**முருகன் :** ஆம். இந்த வளையல்கள் எவ்வளவு அழகாயுள்ளன! இங்கே, இவர் வளையல்கள் செய்து கொண்டிருக்கிறார், பார்.

**கமலம் :** இந்த நெருப்பில் கண்ணாடியை உருக்கி, இதோ ஒரு நொடியில் செய்துவிட்டாரே!

**முருகன் :** பார்த்தாயா, வளையல் செய்யும் வித்தையை! உடைந்த கண்ணாடித் துண்டுகளெல்லாம், வளையல்களாக மாறுகின்றன, பார்.

**கமலம் :** இந்தக் கடையில் எல்லாம் கயிறுகளாக இருக்கின்றனவே!

**முருகன் :** இவை யெல்லாம் தேங்காய் நாரினால் செய்யப்படுகின்றன. கொச்சி, கொல்லம் முதலிய ஊர்களில் தேங்காய் நார்க் கைத்தொழில் மிகுதியாக நடக்கின்றது.

**கமலம் :** இது என்ன கடை, அண்ணா?

**முருகன் :** இங்கே தேனீ வளர்த்தலைச் செய்து காட்டுகிறார்கள். இவையெல்லாம் தேன் புட்டிகள். இதோ இந்த மரப்பெட்டி ஒரு தேன் கூடு. அதற்கு அருகே சில தேனீக்கள் பறந்து கொண்டிருக்கின்றன, பார்.

**கமலம் :** தேனீக்கள் கொட்டி விடுமே!

**முருகன் :** அவற்றைத் தொந்தரவு செய்யாமலிருந்தால், அவை நம்மைக் கொட்டமாட்டா. பெட்டியினுள் சில சட்டங்களிலுள்ள தேனடைகளில் தேனீக்கள் தேனைச் சேமித்துவைக்கும். அவற்றிலிருந்து இந்த எந்திர உதவியால் தேனைமட்டும் பிரித்து எடுக்கலாம்.

**கமலம் :** அண்ணா, இன்று நேரமாகிவிட்டது. நாளைக்கு மறுபடியும் வந்து பார்க்கலாமா?

**முருகன் :** சரி, மறுபடியும் நாளைக்கு வருவோம்.

| | | | |
|---|---|---|---|
| கைத்தொழில் | பிடித்திருக்கிறது | நொடி | தொந்தரவு |
| பொருட்காட்சி | போதிய | வித்தை | தேனடை |
| சிமிழ் | உருக்கி | தேன்கூடு | சேமித்து |

## வினாக்கள்

1. கைத்தொழிற் பொருட்காட்சியில் சிறப்பாக என்ன பார்க்கலாம்?

2. கண்ணாடி வளையல்கள் எப்படிச் செய்யப்படுகின்றன?

3. தேனீக்களை வளர்ப்பது எப்படி?

## பயிற்சி

1. சுட்டெழுத்துக்களைப்பற்றி முன் பாடத்தில் படித்தீர்கள். அதுபோலவே வினாப்பொருளைத் தரும் எழுத்துக்களும் சில உண்டு. (வினா - கேள்வி). பின்கண்ட உதாரணங்களில் வினாப் பொருளைக் காட்டும் எழுத்துக்கள் எவை எவை?

(உ - ம்.) ஆ, எ, ஏ, ஓ, யா என்ற எழுத்துக்கள் வினாப் பொருளைத் தரும்போது வினாவெழுத்து எனப்படும்.

1. பின்வரும் வாக்கியங்களில் வினாவெழுத்து உள்ள இடங்களை எடுத்துக் கூறு.

(1) அம்மா, அப்பா, வந்தாரா?
(2) உனக்கு வயது என்ன?
(3) இது யாருடைய புத்தகம்?

## 7. கிளிக்கண்ணி

### (போலி வீரர்)

நெஞ்சில் உரமு மின்றி
நேர்மைத் திறமு மின்றி
வஞ்சனை சொல்வாரடி—கிளியே
வாய்ச் சொல்லில் வீரரடி. (1)

கூட்டத்தில் கூடிநின்று
கூவிப்பிதற்ற லன்றி
நாட்டத்திற் கொள்ளாரடி—கிளியே
நாளில் மறப்பாரடி. (2)

ஊக்கமும் உள்வலியும்
உண்மையிற் பற்றுமில்லா
மாக்களுக் கோர் கணமும்—கிளியே
வாழத் தகுதி யுண்டோ. (3)

மானம் சிறிதென் றெண்ணி
வாழ்வு பெரிதென் றெண்ணும்
ஈனர்க் குலகந்தன்னில்—கிளியே
இருக்க நிலைமை யுண்டோ. (4)

சொந்தச் சகோதரர்கள்
துன்பத்திற் சாதல் கண்டும்
சிந்தை இரங்காரடி—கிளியே
செம்மை மறந்தாரடி. (5)

—பாரதியார்

| | | |
|---|---|---|
| உரம் | பற்று | சிந்தை |
| வஞ்சனை | மானம் | இரங்கார் |
| நாட்டம் | ஈனர் | செம்மை |

### பயிற்சி

போலி வீரரின் இயல்புகள்பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுது.




## 8. மயிலுக்குப் போர்வை ஈந்த வள்ளல்

பண்டைத் தமிழ் நாட்டில் பல வள்ளல்கள், சிற்றரசர்களாகச் சில குறுநிலப் பகுதிகளை அரசு புரிந்து வந்தார்கள். கடைச் சங்க காலத்தில் ஏழு வள்ளல்கள் புகழ் பெற்று விளங்கினார்கள். அவர்களில் ஒருவனான பேகன் என்ற சிற்றரசனைப் பற்றி ஒரு வரலாறு வழங்குகிறது.

பேகன், நல்லூர் என்ற ஓரூரில் இருந்துகொண்டு மலைநாட்டில் ஒரு பகுதியைச் சிறப்பாக ஆண்டு வந்தான். தன்பால் வந்த இரவலர்களுக்கெல்லாம் அவன் பொருளை வாரி வழங்கினான். தமிழ்ப் புலவர்களை அழைத்து, அவர்களுக்குப் பொன்னும் மணியும் பரிசாகத் தந்து அனுப்பினான். அவர்கள் பேகனுடைய கொடைத் திறத்தைப் புகழ்ந்து பாடிச் செல்வார்கள்.

ஒருநாள் பேகன் தன் ஊரின் அருகேயிருந்த மலைப்

பக்கமாக உலாவப் போயிருந்தான். அப்போது கடுமழை பெய்யும் காலமாயிருந்தது. வானத்தில் கரிய மேகங்கள் திரண்டிருந்தன. அங்குச் சற்றுத் தொலைவில் ஓர் ஆண் மயில் நின்றுகொண்டிருந்தது. வானத்தில் கருமேகங்கள் திரள்வதைப் பார்த்தால் மயில்களின் மனம் மகிழும்; அதற்கு அறிகுறியாகத் தங்கள் நீளமான தோகையை வட்டமாக விரித்துக்கொண்டு ஆடும். அதேபோல் அந்த மயிலும் தன் தோகையை விரித்து ஆடிக்கொண்டிருந்தது.

இதை ஒரு மரத்தடியில் நின்றுகொண்டு பேகன் பார்த்தான். சிறிது நேரத்தில் பெரிய மழையும் பெய்யத் தொடங்கியது.

மயில் ஆடுவதைப் பார்த்த பேகன் முதலில் மகிழ்ந் தான். அப்போது அவன் உடல் குளிரால் நடுங்கிக் கொண்டிருந்தது. அதைப்போலவே மயிலும் குளிர் தாங் காமல் ஆடுகிறதோ என்று பேகன் வருத்தம் கொண்டான். அந்த மயிலின் குளிரைப் போக்க என்ன செய்யலாம் என்று அவன் சிந்தித்தான்.

அப்போது ஆடிக்கொண்டிருந்த மயில், மகிழ்ச்சி மிகுதியால் கூவியது. மயில் கூவியதைக் கேட்ட பேகனுக்கு வருத்தம் இன்னும் அதிகமாகியது. 'மயில் குளிரின் கொடுமை தாங்காமல் கூவுகிறது போலும். உடனே ஒரு போர்வையால் போர்த்தி அதைக் காக்க வேண்டும்,' என்று தீர்மானித்தான்.

அந்தக் காட்டில் போர்வை எங்கு கிடைக்கும்? பேகன் அரண்மனையில் இருந்தால் பல பட்டாடைகளையும், போர்வைகளையும் தருவான். இப்போது என்ன செய் வான்? உலாவ வரும்போது மதிப்புமிக்க மேலாடை ஒன்றைமட்டும் அணிந்துவந்தான். அவ்வாடை பொன் னாலும் உயர்ந்த மணிகளாலும் அழகு செய்யப்பட்டிருந் தது. இதையெல்லாம் பேகன் நினைக்கவில்லை! உடனே

தன் மேலாடையை எடுத்து மயிலின் அருகே போனன். அதன் தோகையும், உடலும் மறையுமாறு போர்த்தினன்; எல்லையில்லாத மகிழ்ச்சி கொண்டான்.

பேகனின் பெருங்கொடையைப் பார்த்தீர்களா? மயிலுக்கு ஒருவரும் போர்வை போர்த்தமாட்டார்கள். ஆனல் கருணைமிகுந்த பேகன், எளிய உயிரான மயிலுக்கு இரங்கினன்; அது குளிரால் வருந்துகிறதென எண்ணி, விலையுயர்ந்த தன் மேலாடையை அதற்குப் போர்த்தினன். இதைக் கேள்வியுற்ற புலவர்கள் அவனுடைய கருணை நெஞ்சினையும் கொடையையும் ஒருங்கே போற்றினர்கள்.

| | | | |
|---|---|---|---|
| குறுநிலம் | கடுமழை | நடுங்கி | மறையுமாறு |
| இரவலர் | திரண்டிருந்தன | சிந்தித்தான் | பெருங்கொடை |
| வாரி | தொலைவில் | கொடுமை | ஒருங்கே |
| உலாவ | தோகை | மதிப்புமிக்க | |

### வினக்கள்

1. வள்ளல்கள் என்போர் யாவர்?
2. பேகன் எந்த நாட்டிற்கு அரசனயிருந்தான்?
3. மயில் ஏன் தோகையை விரித்து ஆடியது?
4. பேகன் மயிலுக்கு ஏன் போர்வையைப் போர்த்தினன்?

### பயிற்சி

1. மெய்யெழுத்துக்கள் வல்லினம், மெல்லினம், இடையினம் என மூன்று வகைப்படும். க், ச், ட், த், ப், ற் என்ற ஆறு எழுத்துக்களும் வல்லினம் அல்லது வல்லெழுத்துக்கள் எனப் படும். ங், ஞ், ண், ந், ம், ன் என்ற இந்த ஆறு எழுத்துக்களும் மெல்லினம் அல்லது மெல்லெழுத்துக்கள் எனப்படும். ய், ர், ல், வ், ழ், ள் என்ற இந்த ஆறு எழுத்துக்களும் இடையினம் அல்லது இடையெழுத்துக்கள் எனப்படும்.

2. பின்வரும் சொற்களிலுள்ள மெய்யெழுத்துக்கள் எந்த இனத்தைச் சேர்ந்தவை? (புத்தகம், கல்வி, கேள், சொல், நெற்றி, மரங்கள்.)

# 9. மதுரைமா நகரம்

## (இன்பச் செலவு)

[திருச்சிராப்பள்ளியிலிருந்து மதுரை சென்ற மாணவர் குழுவில் ஒருவர் தமது இன்பச் செலவைப் பற்றி எழுதிய கட்டுரை.]

சென்ற வெள்ளிக்கிழமை இரவு 9 மணிக்கு மாணவர் நாற்பது பேரும், ஆசிரியர் நான்கு பேருமாக எங்கள் பள்ளிக்கு வந்து கூடினோம். பயணக் குழுவுக்குப் பள்ளித் தலைமையாசிரியரே தலைவர். பயணத்தில் குழுவினர் நடந்துகொள்ள வேண்டிய முறைகளை அவர் சுருக்கமாகச் சொன்னார். இரவு அங்கேயே உறங்கினோம்.

காலை 3 மணிக்குக் கண்விழித்தோம்; எழுந்து காலைக்கடனை முடித்தோம்; திருச்சிக் கோட்டை இரயில் நிலயத்திற்குப் புறப்பட்டோம். 4 மணிக்குப் புகைவண்டி நிலயத்தை அடைந்தோம். வண்டி 4–10க்கு வந்தது. அதில் ஏறித் திருச்சி சந்திப்பை அடைந்தோம். அங்கே வண்டி மாறி, மதுரை செல்லும் வண்டியில் ஏறிக்கொண்டோம். வண்டி 4–30க்குப் புறப்பட்டது; காலை 8 மணிக்கு மதுரை சேர்ந்தது. மதுரைக்கு அருகே ஒரு பாலத்தின் மீது வண்டி சென்றது. அது வையையாற்றின்மீது கட்டப்பட்ட பாலம் என ஆசிரியர்கள் கூறினர்கள். ஆறு சிறிதுதான்; அதில் தண்ணீர் இல்லை. ஆயினும் ஊற்றுக்கால்கள் பல இருந்தன. தெளிவாக ஓடும் நீரில், மக்கள் ஆடைகளைத் துவைத்துக் குளிக்கின்றனர்.

நாங்கள் மதுரை இரயில் நிலயத்தில் இறங்கி, மதுரைத் தமிழ்ச் சங்கக் கட்டடத்தை அடைந்தோம். எங்கள் வருகையை முன்பே அறிந்திருந்த சங்க அமைச்சர், நாங்கள் தங்கத்தக்க வசதி செய்திருந்தார்.

நீராடிச் சிற்றுண்டியருந்தினேம். பிறகு, புறப்பட்டுக் கால்நடையாகச் சென்று மீனுட்சி சுந்தரேசுவரர் கோயிலை அடைந்தோம். ஆலயம் மிகப் பெரியது; ஊரின் நடுவே அமைந்துள்ளது. கோயிலைச் சுற்றி நாற்புறமும் சதுர மாகத் தெருக்கள் அமைந்துள்ளன. அவை சித்திரை வீதி, ஆவணி மூலவீதி, மாசிவீதி, வெளிவீதி என்பன. கோயிலின் நான்கு வாயில்களிலும் உயர்ந்த கோபுரங்கள் உள்ளன. கோயிலின் உள்ளே பெரிய மண்டபமும் சிறிய குளமும் உண்டு. மண்டபத்துக்கு ஆயிரக்கால் மண்டபம் என்றும், குளத்துக்குப் பொற்றுமரைக் குளம் என்றும் பெயர். நாங்கள் கடவுளைத் தொழுது வெளியே வந் தோம்; மணி 12 ஆயிற்று. எங்கள் இருப்பிடம் சென்று, பகலுணவை உண்டு, இளைப்பாறினேம்.

பிற்பகல் 3 மணிக்கு ஒரு 'பஸ்' அமர்த்தி வண்டியூர்த் தெப்பக் குளம் சென்றோம். அது மதுரைக்குக் கிழக்கே இரண்டு மைல் தொலைவில் உள்ளது. 'வண்டியூர்' என்ற கிராமத்தின் அருகே இருப்பதால் குளத்துக்கு அப்பெயர் அமைந்தது. குளம் மிக்க அழகு வாய்ந்தது; ஏறத்தாழ அரை மைல் சுற்றளவுள்ள சதுரமான குளம்; குளத்தின் நடுவில் ஒரு மண்டபம் இருக்கிறது. மண்டபத்தைச் சுற்றி மா, பலா, தென்னை போன்ற மரங்களடர்ந்த சோலை இருக்கிறது. மண்டபத்தின் நான்கு மூலையிலும் சிறு கோபுரங்கள் உள்ளன. அந்த மைய மண்டபத்தைச் சிறு தீவு என்றே சொல்லலாம். ஆண்டுதோறும் மாசி மாதம் இங்கே தெப்பத் திருவிழா நடைபெறும்.

குளத்தைப் பார்த்தபின் பஸ்ஸிலேயே, 4 மணிக்கு மதுரைக்கு மீண்டோம்; திருமலை நாயக்கர் மகாலை அடைந்தோம். அது மதுரைக்குத் தென்கிழக்கில் உள்ளது. அதுவே திருமலை நாயக்கர் வாழ்ந்த அரண் மனையாம். அதைக் கட்டியவரும் அவரே. மரம், இரும்பு

இவை இல்லாமலே, முற்றும் செங்கல்லாலும், சுண்ணும் பாலும் கட்டப்பட்ட அழகான கட்டடம். இதன் வேலைப் பாடு வியக்கத்தக்கது. இப்பொழுது இங்கு நீதிமன்றங் களும், மற்ற அரசியல் அலுவலகங்களும் உள்ளன.

கால்நடையாக ஆவணி மூலவீதி வழியே, மாலை 5 மணிக்கு எங்கள் இருப்பிடத்தை அடைந்தோம். அங்குச் சற்று நேரம் தங்கிச் சிற்றுண்டி அருந்தினேம். எங்க ளுக்கு இடங் கொடுத்துதவிய தமிழ்ச்சங்க அமைச்சருக்கு நன்றி செலுத்திவிட்டு மதுரை இரயில் நிலையத்தை அடைந்தோம். அப்போது மணி 6; வண்டி தயாராக இருந்தது. குழுவின் தலைவர் மாணவர்களின் எண்ணிக் கையைச் சரிபார்த்தார். பிறகு நாங்கள் வண்டியில் ஏறி னேம்; வண்டி புறப்பட்டது. இரவு 9 மணிக்குத் திருச்சி சந்திப்பை அடைந்தோம். அங்கிருந்து வண்டி மாறி இரவு $9\frac{1}{2}$ மணிக்குத் திருச்சிக் கோட்டை சேர்ந்தோம்.

குழுத் தலைவருக்கு எங்கள் நன்றியைச் செலுத் தினேம்; குழுவினர் தத்தம் இல்லம் நோக்கிச் சென்றனர்.

| | | |
|---|---|---|
| பயணக்குழு | துவைத்து | பொற்றுமரை |
| காலைக்கடன் | வருகை | ஏறத்தாழ |
| இரயில் நிலையம் | சங்க அமைச்சர் | தெப்பத் திருவிழா |
| சந்திப்பு | ஆலயம் | மீண்டோம் |
| ஊற்றுக்கால் | ஆயிரக்கால் | வேலைப்பாடு |
| அலுவலகம் | அருந்தினேம் | நன்றி |

### வினக்கள்

1. வையை ஆற்றில் நீர் ஓடாத காலங்களில் மக்கள் எவ் வாறு நீரைப் பெறுகின்றனர்?

2. மீனட்சி அம்மன் கோயிலைப் பற்றி ஐந்தாறு வாக்கியங் கள் எழுது.

3. வண்டியூர்த் தெப்பக் குளத்தின் சிறப்பு என்ன ?

4. திருமலை நாயக்கர் மகால் எவ்வாறு கட்டப்பட்டுள்ளது? அது இப்பொழுது எவ்வாறு பயன்படுகிறது ?

பயிற்சி

பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயர், வினைச்சொற்களை எடுத்துக்கூறு. அவற்றுள் எந்தெந்தப் பெயர்ச்சொற்கள் ஒருமையைக் குறிக்கின்றன? எந்தெந்தச் சொற்கள் பன்மையைக் குறிக்கின்றன ?

(1) புறாக்கள் ஆகாயத்தில் பறக்கின்றன.
(2) குளத்தில் நீர் நிரம்பியிருக்கிறது.
(3) பலாப்பழம் சுவையுள்ளது.
(4) அப்பா எனக்கு இரண்டு சட்டைகள் தைத்தார்.



# 10. புறு

(பெற்ருேரன்பு)

தாய் இரை தின்ற பின்பு
　　தன் குஞ்சைக் கூட்டிற் கண்டு,
வாயினைத் திறக்கும் ; குஞ்சு
　　தாய் வாய்க்குள் வைக்கும் மூக்கை ;
தாயருந் தியதைக் கக்கித்
　　தன்குஞ்சின் குடல்நி ரப்பும் ;
ஓய்ந்ததும் தந்தை ஊட்டும்
　　அன்புக்கோர் எடுத்துக் காட்டாய்.

—பாரதிதாசனர்

| | | |
|---|---|---|
| இரை | கக்கி | ஊட்டும் |
| அருந்தியது | ஓய்ந்ததும் | எடுத்துக்காட்டு |

### வினுக்கள்

1. தாய்ப்பறவை குஞ்சினுக்கு எவ்வாறு இரை ஊட்டுகிறது ?

2. இப் பாட்டிலிருந்து தெரிவது என்ன ?

## 11. தருமதத்தனும் இரசவாதியும்

கலிங்க நாட்டில் அரிபுரம் என்ற அணிநகர் உண்டு. அந்நகரில் ஒரு வணிகன் சிறப்புடன் வாழ்ந்தான். அவன் பெயர் தருமதத்தன் என்பது. அவன், தன் பெயருக் கேற்ற வண்ணம் நல்லறங்களைச் செய்துவந்தான். செல் வத்திற் குபேரனை ஒத்தவனென அவன் யாவரும் போற்ற வாழ்ந்தான்.

ஒருநாள் அவனிடம், இரசவாதி ஒருவன் வந்தான். அவன் மொட்டைத் தலையனும், காதில் குண்டலமும் அணிந்தவனுமிருந்தான்; நெற்றியில் திருநீறு இருந் தது. மேற்சட்டையும் உருத்திராக்க மாலையும் போட்டிருந் தான்; கையில் பிரம்பைப் பிடித்திருந்தான். இரசவாதி யைக் கண்ட தருமதத்தன் சிவபெருமானையே கண்டது போல மகிழ்ந்து, அவன் பாதங்களில் வீழ்ந்து வணங்கி, 'இவன் அரிய சித்தி பெற்றவன்போலும்' என எண்ணித் தன் வீட்டிற்குள் அழைத்தான். பொன்னாலான கலத்தில் அறுசுவை உண்டி படைத்து உண்பித்தான்.

பின்னர் இரசவாதியை நோக்கித் தருமதத்தன், "நீங்கள் இங்கு வந்த காரணம் என்ன?" எனக் கேட் டான். இரசவாதி, "என்னிடத்தில் சிவன் தந்த வித்தை உள்ளது; குருபக்தி உடையவர்க்கே கூறத்தக்கது. ஆதலால் குருபக்தி மிக்க உனக்கு அதை நான் உரைக் கின்றேன்; கேள். அதனால் வேண்டிய பொன்னைப் பெறலாம். இரும்பை நாகமாக்குவோம்; அதனைப் பொன் னாக்குவோம். ஈயத்தையும் இரசத்தையும் வெள்ளியாக்கு வோம்; அன்றியும் வங்கத்திலிருந்து மாற்றுயர்ந்த தங்கத் தையும் செய்து காட்டுவோம். உனது பொருளனைத்தை யும் கொடுத்தால், உன் மாளிகையில் செல்வம் வைக்க

இடமில்லை என்னும்படி செய்வோம்,'' என மொழிந்தான். இவைகளைக் கேட்ட தருமதத்தன் இரசவாதியை நம்பி, அவனை வணங்கினன். முன்னோராலும் தன்னாலும் தேடப்பட்ட பொருள்களையும், அணிகளையும் கொண்டு வந்து இரசவாதியிடம் வைத்தான்.

இரசவாதி மகிழ்ந்து அவன் கொடுத்த பொன்னை யெல்லாம் நெருப்பிலிட்டு உருக்கித் திரட்டித் தருமதத்தன் முன்னால் இரும்பைப் பொன்னாக்கும் வித்தைகளையெல் லாம் செய்தான். இந்த வித்தைகள் யாவும் காற்றுப் புகாத இடத்தில் உலோகங்களைப் பலமுறை புடம் வைத்தல், குகையிலிட்டு உருக்குதல் முதலியனவாம். இறுதியாக இரசவாதி பொற்குகையை எடுத்து மெது வாகத் தன் ஆடையில் மறைத்துக்கொண்டு, தன்னிடத் திருந்த இரும்புக் குகையைப் பொற்குகை இருந்த இடத்தில் வைத்துப் புடத்தீயின் பெரும் புகையைத் தணித்தான்.

பிறகு அந்த இரசவாதி, தருமதத்தனை நோக்கி "இக்குகையை உன் கையினாலெடுத்து இவ்வழல்மேல் வைப்பாயாக,'' என்றான். அவனும் அவ்வாறு செய்தான். இரசவாதி தருமதத்தனிடம், "நீ மூன்றுநாள் உண்ணாது, எவரிடமும் பேசாது, பிறரைப் பாராது, எம்மையே சிந்தித்திரு. நாம் காளியின் முன்பு ஒரு யாகம் செய்ய வேண்டும். அதை முடித்ததும் நான்காம் நாள் இங்கே வருவோம்,'' என்று கூறி, விடைபெற்றுச் சென்றான்; விரைவாக நெடுந்தூரம் போய், அந்நாட்டைக் கடந்து வேறுநாட்டை அடைந்தான்.

பொருளாசையால் இரசவாதியின் சொற்படி தரும தத்தன் காத்திருந்தான். இரசவாதி வரவில்லை. "இரச வாதி சொல் தவறுவானோ?'' என்று வருந்தினான். பல இடங்களில் தேடிக் காணாது வீடுவந்து சேர்ந்தான்.

வந்ததும் புடத்திலிருந்த குகையை எடுத்துப் பார்த்தான். இரும்பாக இருந்தது! தருமதத்தன் செல்வமெல்லாம் இழந்ததால் பித்துக்கொண்டு அலைந்து இறந்தான். அவன் இந்நிலை அடைந்தது, பேராசையாலன்றோ?

| | | | |
|---|---|---|---|
| வித்தை | நல்லறம் | இரசவாதி | குண்டலம் |
| திருநீறு | உருத்திராக்கம் | சித்தி | உண்டி |
| படைத்து | உண்பித்தான் | வித்தை | குருபக்தி |
| நாகம் | வங்கம் | மாற்றுயர்ந்த | புடம் |
| பொற்குகை | அழல் | உண்ணுது | யாகம் |
| தணித்தான் | | | |

## வினுக்கள்

1. இரசவாதியின் தோற்றம் எவ்வாறிருந்தது?
2. இரசவாதி தருமதத்தனிடம் என்ன கூறினுன்?
3. தருமதத்தன் இரசவாதிக்கு என்ன கொடுத்தான்?
4. இரசவாதி தருமதத்தனை எப்படி ஏமாற்றினுன்?
5. முடிவில் தருமதத்தனின் கதி என்ன ஆயிற்று?

## பயிற்சி

1. வீரன், புரு, தென்னை, குதிரை, தவளை, பேனு, மோதிரம் —இவைகள் பெயர்ச் சொற்கள். இவைகள் முறையே மனிதன், பறவை, மரம், மிருகம் முதலிய பல பொருள்களின் பெயர்கள்.

2. இம்மாதிரியே வீடு, நிலையம், பாடசாலை, வனம் இவைகளும் பெயர்ச் சொற்கள். இவைகள் இடங்களின் பெயர்கள்.

3. இம்மாதிரியே நாள், வாரம், நிமிடம், நேற்று என்பனவும் பெயர்ச் சொற்கள். இவைகள் காலத்தைக் குறிக்கும் பெயர்கள்.

4. பொருள்களின் பெயர்களைக் குறிப்பவை பொருட்பெயர் எனப்படும். இடங்களின் பெயர்களைக் குறிப்பவை இடப்பெயர், காலத்தின் பெயரைக் குறிப்பவை காலப் பெயர் எனப்படும்.

பொருட்பெயர், காலப்பெயர், இடப்பெயர் இவை ஒவ்வொன்றுக்கும் முறையே மும்மூன்று உதாரணங்கள் தருக.

# 12. நெய் வகைகள்

ஆசிரியர்: வேலா! உங்கள் வீட்டில் தீபாவளிப் பண்டிகையின்போது பணியாரங்கள் சாப்பிட்டாயா?

வேலன்: ஆம், ஐயா! சாப்பிட்டேன்.

ஆ.: அவை எதில் செய்யப்பட்டன என்று உனக்குத் தெரியுமா?

வே.: தெரியும், ஐயா! நல்லெண்ணெய், கடலையெண்ணெய் ஆகியவற்றில் செய்தவை.

ஆ.: வேலா! நீ கூறிய நெய்களின் பெயர்களில் தவறுகள் உள்ளன. அதைப் பற்றியும் இன்னும் பல நெய்களைப் பற்றியும் உங்களுக்குச் சொல்லப்போகிறேன்.

வே.: என் வீட்டில் பெற்றோரும் அப்படிச் சொன்னார்கள், ஐயா! இனி, நீங்கள் கூறுவது போலத் திருத்திக் கொள்கிறேன்.

ஆ.: சரி. மாணவர்களே! நெய் இரண்டு வகைப் படும். விதைகளை அரைத்து எடுப்பது ஒருவகை நெய். பாலைத் தயிராகத் தோய்த்துக் கடைந்தெடுத்த வெண்ணெயை உருக்கிப் பெறுவது மற்றொரு வகை நெய். தண்ணீரை விட நெய் சற்றுத் தடிப்பாக இருக்கும்.

வே.: ஐயா! பால் தானே தயிராகுமா?

ஆ.: இல்லை! காய்ச்சிய பாலில் சிறிதளவு மோரைப் பிரையாக ஊற்றினால் தயிராக மாறும். தயிரைக் கடைந்தால் வெண்ணெய் கிடைக்கும். வெண்ணெயைச் சட்டியிலிட்டு உருக்கினால் மணமுள்ள நெய் வரும். பசும் பாலில் கிடைத்த நெய், பசுநெய்; எருமைப் பாலில் கிடைக்கும் நெய், எருமை நெய். இரண்டிலும் பசு நெய்யே சிறந்தது.

பாலன் : ஐயா ! நாம் மற்ற நெய்களை எப்படிப் பெறுகிறோம் ?

ஆ. : சொல்கிறேன். நல்லெண்ணெய் என்று நாம் கூறுகிறோமல்லவா ? அதுவே எண்ணெய். எள் என்ற விதையைச் செக்கிலிட்டு ஆட்டுவார்கள். அதிலிருந்து நெய் வரும். எள்ளிலிருந்து கிடைக்கும் நெய்யாதலால், அதை எண்ணெய் (எள்+நெய்) என்கிறோம். இதைப் போலத் தென்னை மரத்தின் வித்திலிருந்தும் நெய் கிடைக்கிறது.

பா. : தென்னை மரத்திலும் நெய் உண்டா ?

ஆ. : ஆம். தேங்காயெண்ணெய் என்று நாம் சொல்வதுதான் தேங்காய் நெய். நன்றாக முற்றிய தேங்காய் நெற்றின் உள்ளேயிருக்கும் பருப்பை எடுப்பார்கள். இது கொப்பரை எனப்படும். கொப்பரையைச் செக்கில் ஆட்டி நெய் எடுப்பார்கள். இதுவே தேங்காய் நெய்.

வேலன் : ஐயா, இதையெல்லாம் கேட்க வியப்பாயிருக்கிறதே !

ஆ. : இன்னும் ஆமணக்குநெய், கடலைநெய், இலுப்பநெய் என்பவைகளையும் விதைகள் மூலம் அடைகிறோம். மண்ணிலிருந்தும் ஒரு நெய் கிடைக்கிறது ; அது மண் நெய். அதை மண்ணெண்ணெய் என்கிறோம் ; அது தவறு. மண்ணெய் என்று மட்டும் சொல்லவேண்டும்.

வே. : மண்ணிலும் நெய் கிடைக்குமா, ஐயா ?

ஆ. : ஆம். அது தண்ணீரைப்போல இருக்கும். எல்லா இடங்களிலும் கிடைக்காது. நம் நாட்டில் அஸ்ஸாம் என்ற இராச்சியத்திலும், உலகில் வேறு சில இடங்களிலும் கிடைக்கிறது. தண்ணீருக்குக் கிணறு வெட்டுவது போல நிலத்தை ஆழமாகத் தோண்டி மண்ணெய் பெறுகிறோம்.

**வேலன், பாலன் :** ஐயா! நெய்களின் பயன்களே யும் அறிய ஆசைப்படுகிறோம்.

ஆ: சொல்கிறேன். எருமை நெய்யை உணவில் கலந்துண்ணலாம். பசுநெய் உணவிலும் மருந்திலும் பயன்படும். எண்ணெய் தேய்த்துக் குளித்தல் உடலுக்கு உறுதி. வாரம் இருமுறை எண்ணெய் தேய்த்துக் குளித் தல் நல்லது. தேங்காய் நெய் தலே மயிரை வளர்க்கும். ஆமணக்குநெய் விளக்கெரிக்கப் பயன்படும்; தலேயில் தேய்த்தால் குளிர்ச்சி தரும். இலுப்பநெய்யும், கடலே நெய்யும் விளக்கெரிக்கப் பயன்படும். கடலே நெய்யில் பணியாரம் செய்யலாம். இன்னும் இது சோப்புச் செய்யப் பெரிய அளவில் பயனுறுகிறது. மண்ணெய் விளக்கெரிக்க உதவுகிறது. இதில் 'பெட்ரோல்' என்ற திரவமும் கிடைக்கிறது. இதனல் மோட்டார் வண்டி களும், எந்திரங்களும் இயங்குகின்றன.

**மாணவர்கள் :** ஐயா! நாங்கள் நெய் வகைகள் பலவற்றை அறிந்தோம்.

| | | |
|---|---|---|
| தடிப்பாக | வித்து | மண்ணெய் |
| பிரை | நெற்று | பெட்ரோல் |
| உருக்கினல் | கொப்பரை | எந்திரம் |

**வினக்கள்**

1. எண்ணெய் என்பது யாது?
2. கடலே நெய், தேங்காய் நெய் இவற்றின் பயன்களேக் கூறு.
3. 'மண்ணெய்' எப்படிக் கிடைக்கிறது?
4. அதன் உபயோகங்களே எடுத்துக் கூறு.

**பயிற்சி**

1. கை, கால், கண்—இவைப் பெயர்ச் சொற்கள். இவை உடலின் பாகங்களேக் குறிக்கும் பெயர்ச் சொற்கள். இம்

மாதிரியே கிளை, தண்டு, வேர் என்பன மரத்தின் பாகங்களைக் குறிக்கும் பெயர்ச் சொற்கள். ஒரு பொருளினுடைய பாகத்தின் பெயரைக் குறிக்கும் சொல் சினைப் பெயர் எனப்படும்.

2. காந்தி பொறுமை உள்ளவர் — இவ்வாக்கியத்தில் பொறுமை என்பது குணத்தின் பெயரைக் குறிக்கிறது அல்லவா? இவ்வாறு குணத்தின் பெயரைக் குறிக்கும் சொல் குணப் பெயர் அல்லது பண்புப் பெயர் எனப்படும்.

3. உழவு ஒரு சிறந்த தொழில் — இவ்வாக்கியத்தில் உழவு என்ற பெயர்ச் சொல் ஒரு தொழிலின் பெயரைக் குறிக்கிறது. தொழிலின் பெயரைக் குறிக்கும் சொல் தொழிற் பெயர் எனப்படும்.

4. பின்வரும் பெயர்ச் சொற்களில் ஒவ்வொன்றும் எந்த வகையைச் சேர்ந்தது என்று கூறு:

கோபம், காது, வெண்மை, குளிர்ச்சி, விரல், நெசவு, ஓட்டம், ஆட்டம், வேகம், கொம்பு.

# 13. உத்தமன் காந்தி

கவிபாடிப் பெருமை செய்யக் கம்பனில்லை ;
கற்பனைக்கிங் கில்லையந்தக் காளிதாசன் ;
செவிநாடுங் கீர்த்தனைக்குத் தியாக ரில்லை ;
தேசீய பாரதியின் திறமு மில்லை ;
புவிசூடும் அறிவினுக்கோர் புதுமை தந்து
புண்ணியமுங் கண்ணியமும் புகழுஞ் சேர்ந்த
உவமானம் வேறெவரும் உரைக்க வொண்ணு
உத்தமர்தாம் காந்தியரை யுவந்து பேச. (1)

சொல்லுவது யாவர்க்கும் சுலபமாகும்,
சொன்னபடி நடப்பவர்கள் மிகவும் சொற்பம் ;
எல்லையின்றி நீதிகளை எழுதுவார்கள்,
எழுதியது பிறருக்கே தமக்கென் றெண்ணுர் ;
தொல்லுலகில் நாமறிந்த தலைவர் தம்முள்
சொல்வதுபோல் செயல்முயன்ருேர் இவரைப்போல
இல்லையெனும் மோஹன்தாஸ் கரம்சந்த் காந்தி
இந்தியத்தாய் உலகினுக்கே ஈந்த செல்வம். (2)

—நாமக்கல் கவிஞர்

| | | |
|---|---|---|
| கற்பனை | கண்ணியம் | சுலபம் |
| கீர்த்தனை | புண்ணியம் | சொற்பம் |
| புவி | உவந்து | தொல்லுலகு |

### வினுக்கள்

1. காந்தியடிகளைப் புகழ்ந்து பேச யார் யார் இல்லை என்கிருர் நம் கவிஞர் ?

2. காந்தியடிகளின் தனிச் சிறப்பு யாது ?



## 14. பகைவனையும் மன்னித்தல்

ஒரு காலத்தில் அரேபிய நாட்டில் ஒரு தலைவன் வாழ்ந்தான். அவன் பெயர் யூசுப். அவன் மக்களிடம் மிக்க அன்போடும் பெருந்தன்மையோடும் இருந்தான். மக்கள் யாவரும் அவனை அறிந்திருந்தார்கள். அவனை அவர்கள் யாவரும் ' நல்லோன் யூசுப் ' என்றே அழைத்தார்கள்.

ஒருநாள் இரவு, ஓர் அன்னியன் யூசுப்பின் கூடாரத்திற்குள் நுழைந்தான். அவன் தன்னுடைய பகைவர்களிடமிருந்து தப்பியோடி வந்ததாக யூசுப்பிடம் சொன்னான். அன்று இரவு தங்குவதற்கு இடம் கொடுக்குமாறு

கேட்டான். யூசுப் வந்தவனை மகிழ்ச்சியோடு வரவேற்ருன். அவனுக்கு உணவு தந்தான்; தூங்குவதற்கு இடமும் கொடுத்தான்.

விடிவதற்கு முன்னுல் யூசுப் படுக்கையை விட்டு எழுந்தான். அந்த மனிதனையும் எழுப்பினுன். "நண்பா! இதோ இந்தப் பை நிறையத் தங்கம் இருக்கிறது. இதைச் செலவுக்கு வைத்துக்கொள். இங்கிருந்து பாலை வனத்திற்கு ஓடிப்போய்விடு. பொழுது விடிந்து விட்டால் உன் பகைவர்கள் பிடித்துக்கொள்வார்கள். "ஓடிவிடு," என்று எச்சரிக்கை செய்தான்.

யூசுப் காட்டிய அன்பும், நேர்மையும் அந்த மனிதனிடத்தில் இயற்கையாக இருந்த நேர்மைக் குணத்தைத் தூண்டிவிட்டன. அவன் கண்ணீருடன், "ஓ, நல்லோனே! உனக்குப் பிறந்த முதல் மகனைக் கொன்றவனுன இப்ராஹிம் என்பவனே நான். உன் மகனையே கொன்ற இக் கொடியவனிடத்தில், நீ பேரன்பைக் காட்டியிருக்கிருய்......"

அந்த அன்னியன் சொன்ன வார்த்தைகளை யூசுப் கேட்டதும் கடுங்கோபம் கொண்டான். இரண்டே நிமிடங்களில் அவனை அந்த இடத்திலேயே கொன்றுவிடத் துடித்தான். ஆனுல் யூசுப்பினிடம் அமைந்திருந்த இயல்பான நேர்மைத் தன்மை மேலோங்கியது; விருந்தாளியைக் கொல்லலாகாது என எண்ணினுன். உடனே அவன் மனம் மாறிவிட்டது. "நீ உடனே ஓடிப்போய்விடு," என்று அந்த மனிதனிடம் சொன்னுன். இப்ராஹிம் உடனே ஓடிப் போய்விட்டான்.

இப்ராஹிம் ஓடி மறைந்த பிறகு, யூசுப் தனக்குள் சொல்லிக்கொண்டான்:

"என் மகனைக் கொன்றவனைத் தண்டித்துவிட்டேன். தீமை செய்த ஒருவனுக்கு நான் நன்மை செய்தேன்.

இப்ராஹிமும் உண்மையிலேயே தன் குற்றத்தை நினைத்து வருந்தினன்; செய்த குற்றத்தையும் என்னிடம் ஒப்புக் கொண்டான். அதுவே எனக்குப் போதுமானது.''

குற்றம் புரிந்தவனை மன்னித்தலே நேர்மையான தண்டனையாகும்.

| | | |
|---|---|---|
| பெருந்தன்மை | பாலைவனம் | மேலோங்கியது |
| அன்னியன் | நேர்மை | புரிந்தன |
| கூடாரம் | கொடியவன் | இயல்பான |

### வினாக்கள்

1. யூசுப்புக்கு நல்லோன் என்று பெயர் வரக் காரணம் யாது?
2. யூசுப்பின் கூடாரத்துக்கு வந்த அன்னியன் என்ன கூறினன்?
3. யூசுப் அன்னியனை எவ்வாறு உபசரித்தான்?
4. மறுநாள் காலை யூசுப் அன்னியனுக்கு என்ன கொடுத்தான்?
5. அன்னியன் யூசுப்பினிடம் கூறியதென்ன?
6. யூசுப் செய்ததென்ன?

### பயிற்சி

1. அ, இ, உ—இவ்வெழுத்துக்கள் சுட்டுப் பொருளைத் தரும் போது சுட்டெழுத்து எனப்படும். அதுபோலவே அவன், அவள், அது, இவர், இது என்ற சொற்களும் சுட்டுப் பொருளைத் தருகின்றன.

சுட்டெழுத்துக்களின் அடியாகப் பிறக்கும் பெயர்ச் சொற்கள் சுட்டுப்பெயர் எனப்படும்.

2. எது, யார், எவன்...இப்பெயர்ச் சொற்களில் உள்ள முதல் எழுத்துக்கள் வினவெழுத்துக்கள்.

வினவெழுத்துக்களின் அடியாகப் பிறக்கும் பெயர்ச் சொற்கள் வினப்பெயர் எனப்படும்.

3. பின்வரும் வாக்கியங்களிலுள்ள வினப்பெயர்களையும் சுட்டுப் பெயர்களையும் எடுத்துக் கூறு.

இது யாருடைய புத்தகம்?
உங்கள் வீடு எங்கே இருக்கிறது?
அவர் அங்கே என்ன செய்கிருர்?

## 15. பென்சில் சொல்லிய கதை

"காகிதத்தில் கணக்குப் போடப் பென்சில் இல்லையே, அப்பா!" என்று கேட்கிறீர்கள். உங்கள் தந்தையார் கொடுக்கும் மூன்று அல்லது நான்கு அணு வைப் பெற்றுக்கொண்டு கடைக்கு ஓடுகிறீர்கள். விலைக் குத் தகுந்த பென்சிலை, உங்களுக்குப் பிடித்த நிறத்திலும் வடிவத்திலும், வாங்கிக் கொள்கிறீர்கள். ஒரு முனையைச் சீவி எழுதத் தொடங்குகிறீர்கள். அவ்வளவுதான். காகிதப் பென்சில்களாகிய நாங்கள் எவ்வளவு அற்புத மான பொருள்கள் என்பதைப் பற்றி நீங்கள் சிந்தித்துப் பார்த்ததுண்டா? உங்கள் நாட்டில் சென்னையில் ஒரு பென்சில் தொழிற்சாலை இருப்பதையாவது கேள்விப் பட்டிருக்கிறீர்களா? மலிவான பென்சில்களைப் பற்றி உங்களுக்கு ஏது அத்துணைக் கவலை!

நாங்கள் மலிவாக இருந்தாலும் எங்களை அமைப் பதற்கான பொருள்கள் வெவ்வேறு கண்டங்களிலிருந்து கடல்களைக் கடந்து தொழிற்சாலைகளுக்கு வருகின்றன. தெற்கு ஆப்பிரிக்காவில் கென்யா என்ற ஒரு தேசமிருக் கிறது.. அங்குள்ள அடர்ந்த காடுகளில் மிருதுவான சில மரங்கள் வளர்கின்றன. அவை பென்சிலை அமைக்க ஏற்றவை. நம் நாட்டுச் சந்தன மரங்களையும் பயன் படுத்தலாம். அந்த மரங்களை வெட்டிச் சட்டங்களாக்கிப் பென்சில் தொழிற்சாலைகளுக்கு அனுப்புகிறார்கள். எழுத உதவும் கரிய கம்பியை அமைக்கக் கிராவைட்டு என்ற ஒருவகைக் கரியும் களிமண்ணும் தேவை. அமெரிக்காவி லும், இலங்கையிலும் இந்தக் கரி கிடைக்கிறது. இது சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுக்கப்படுகிறது. இதனு டன் கலக்கத் தகுந்த களிமண் கோதாவரி நதிப் படுகை

யில் கிடைக்கிறது. இந்தப் பொருள்களெல்லாம் பென்சில் தொழிற்சாலைக்கு வந்து சேருகின்றன.




கிராவைட்டுத் தூளையும் களிமண்ணையும் சேர்த்துச் சிறிது நீருடன் நன்றாக அரைக்கிறார்கள். பசை

போலுள்ள இந்தக் கலவையை ஓர் எந்திரத்தில் வைத்து அழுத்தி மெல்லிய உருளைகளாகச் செய்கிருர்கள். கம்பிகளை உலர்த்தித் தரம் தரமாகப் பிரித்து வைக்கிருர்கள். இவைகளே பென்சில் 'லெட்' எனப்படும்.

காடி போன்ற பள்ளங்கள் உண்டாகுமாறு தகுந்த கனமுள்ள மரச்சட்டங்களை இழைத்து, வச்சிரப் பசை பூசுகிருர்கள். இவற்றில் கரிய பென்சில் 'லெட்' கம்பிகளைப் பொருத்தி ஒட்டவைத்து, பள்ளங்களுள்ள மரச் சட்டங்களை மேலேயும் பொருத்துகிருர்கள். மரச் சட்டங்களிலுள்ள பள்ளங்கள் சமதூரத்தில் இருக்குமாதலால், இரு சட்டங்களும் கரிக்கம்பிகளைப் பிணைத்துக் கொண்டு நன்கு பொருந்திவிடும். இந்த மரச் சட்டங்களை ஓர் எந்திரத்தில் கொடுத்துத் தனித் தனிப் பென்சில்களாக அறுக்கிருர்கள். இப்பொழுதுதான் பென்சில்களாகிய எங்களுடைய வடிவம் உருண்டையாகவோ அறு கோணமாகவோ அமைகின்றது. பிறகு எங்களை ஒரே அளவாக வெட்டுகிருர்கள்.

மற்ருேர் எந்திரத்தின் உதவியால் எங்களுக்கு நீலம், சிவப்பு, பச்சை, மஞ்சள் முதலிய வர்ணங்களைப் பூசுகிருர்கள். இப்பொழுது நாங்கள் அழகான தோற்றம் பெறுகிருேம். பிறகு வேருேர் எந்திரத்தில் எங்களைக் கொடுத்து, எங்களுக்குக் கொடுக்கப்பட்ட பெயரோடு, செய்யப்பட்ட தொழிற்சாலையின் பெயரையோ நாட்டின் பெயரையோ அச்செழுத்துக்களில் பொறிக்கிருர்கள். நாங்கள் மிருதுவான பென்சில்களா, கடினமானவையா என்பவை போன்ற விவரக் குறிப்புக்களும் பொறிக்கப் படுகின்றன.

இவ்வளவும் செய்த பிறகு, எங்களை அழகிய அட்டைப் பெட்டிகளில் பன்னிரண்டு பன்னிரண்டாகக் கட்டி வைக்கிருர்கள். பிறகு நாங்கள் கடைகளுக்கு

அனுப்பப்படுகிறோம். கடைகளிலிருந்து நீங்கள் விலைக்கு வாங்கிக் கொள்கிறீர்கள்.

எங்களுடைய மதிப்பை அறியாமல் கோபத்தில் எங்களை உடைப்பதும் சீவிச் சீவிப் போடுவதும் உங்களுக்குத் தினசரி வழக்கமாயிருக்கிறது. உங்களுடைய கல்விக்கு நாங்கள் எத்துணை உதவி புரிகிறோம் என்பதை எண்ணிப் பார்த்து, இனியேனும் எங்களிடம் சிறிது நன்றியறிதலுணர்ச்சி காட்டுங்கள்.

| | | | |
|---|---|---|---|
| சிந்தித்து | பொறி | காடி | எத்துணை |
| மலிவு | கிராவைட்டு | விகிதம் | புரிகிறோம் |
| அத்துணை | படுகை | அறுகோணம் | |

## வினாக்கள்

1. பென்சில் செய்வதற்குத் தேவையான பொருள்கள் என்ன?
2. பென்சில்களில் உள்ள கரிக்கம்பிகள் எவ்வாறு செய்யப் படுகின்றன?
3. பென்சில்களை எந்த வடிவத்தில் அமைக்கிறார்கள்?
4. பென்சில்களின்மீது என்ன என்ன விவரங்கள் பொறிக் கப்படுகின்றன?

## பயிற்சி

1. ஒரு படி நெல் வாங்கி வா. ஏழு நாள் கொண்டது ஒரு வாரம். ஒரு வீசை நெய் என்ன விலை? இவ்வாக்கியங்களில் ஒரு, ஏழு, படி, வீசை என்ற சொற்களில் ஒரு, ஏழு என்பவை எண்களைக் குறிக்கின்றன. படி என்பது முகத்தல் அளவைப் பெயரைக் குறிக்கிறது. வீசை என்பது நிறுத்தல் அளவைப் பெயரைக் குறிக்கிறது.

2. எண்களின் பெயரைக் குறிக்கும் சொற்கள் எண்ணுப் பெயர் எனப்படும். அளவைகளின் பெயரைக் குறிக்கும் சொற்கள் அளவைப் பெயர் எனப்படும்.

3. பின்வரும் வாக்கியங்களிலுள்ள எண்ணுப் பெயர்களை யும், அளவைப் பெயர்களையும் எடுத்துக் கூறு:

(1) ஒரு ஜதை வேஷ்டி வாங்கி வா.
(2) நாலு கஜம் துணி கிழி.
(3) பன்னிரண்டு மரக்கால் கொண்டது ஒரு கலம் ஆகும்.



## 16. ஆசிய சோதி

இறந்த மைந்தனுெடு தாய் புத்தரை யடைந்து கூறுதல்

“ காடும் மலையும் கடந்துவந்தேன்—உன்னைக்
கண்டு துயரெல்லாம் போக்கவந்தேன்
வாடும் மலர்ச்செண்டு போற்கிடக்கும்—இந்த
மைந்தன் உயிரெழச் செய்யும்ஐயா ! (1)

பெற்ற வயிறு துடிக்குதையா—ஒரு
பிள்ளையும் வேறெனக் கில்லைஐயா,
உற்ற உறவினர் இல்லைஐயா—என்மீ
துள்ளம் இரங்கிட வேணு மையா !” (2)

புத்தர் மறுமொழி

“ தாயே நின் மனக்கவலை—ஒழிந்திடத்
தக்கநல் மருந் துரைப்பேன்
சேயினை எழுப்பிடுவேன்—விளையாடித்
திரியவும் செய்திடுவேன்

நாவிய கடுகு வேண்டும்—அதுவுமோர்
நாவுரி தானும் வேண்டும்
சாவினை யறியாத வீட்டினில்
தந்ததாய் இருக்க வேண்டும்.'' (3)

தாய் கடுகு தேடிச் சென்று மீண்டு வந்து கூறுதல்

என்றுரைத்த மொழிகேட்டவ் வேழை மார்பில்
ஏந்தி யணைத்திடுமகனோ டூரில் எங்கும்
சென்று கடுகிரந்து வெறுங்கைய ளாகித்
திரும்பிமுனி திருவடியைச் சிரமேற்கொண்டு. (4)

"ஐயமிடு மனைகளிலே மரணமென்றும்
அறியாத மனையேதும் இல்லை, இல்லை;
வையகத்தில் பிறப்புளதேல் இறப்பும் உண்டு;
மாற்றரிய விதியிதுவென் றுணர்ந்துகொண்டேன்;
கையமர்ந்த மகவினையும் காலில்இட்டேன்;
கண்விழியாப் பிணம்வைத்துக் காப்பதுண்டோ?
செய்யதிரு வடிபணிந்து போற்றிஇந்தச்
செய்தியினைத் தெரிவிக்க வந்தேன்'' என்றாள். (5)

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

| | | | |
|---|---|---|---|
| மலர்ச்செண்டு | இரங்கிட | நாவுரி | கையமர்ந்த |
| மைந்தன் | சேயினை | ஐயமிடு | செய்ய |
| உள்ளம் | நாவிய | வையகம் | மாற்றரிய |

### வினாக்கள்

1. புத்தரிடம் வந்த தாய் என்ன வேண்டிக் கொண்டாள்?
2. புத்தர் அவளிடம் கூறியது என்ன?
3. தாய் கடுகு தேடிய பொழுது என்ன அறிந்து கொண்டாள்?

# 17. கரிகாலன் அரசெய்தல்

முற்காலத்தில் சோழநாட்டைப் பல மன்னர்கள் புகழுடன் ஆண்டார்கள். அவர்களுள் கரிகாலனின் ஆட்சி மிகச் சிறப்புடன் விளங்கிற்று. இம்மன்னனது இயற்பெயர் திருமாவளவன் என்பது. இவனது இள மைப் பருவத்தில் இவன் தந்தை இளஞ்சேட்சென்னி போரில் இறந்தான். தந்தை இறந்தபின் இளவரசன் கரிகாலன் தன் தாய்மாமனும் பெரும்புலவருமாகிய இரும் பிடர்த் தலையார் என்பவருடன் உறையூர் அரண்மனையி லேயே சில ஆண்டுகள் உறைந்து வந்தான். அங்ஙனம் அவன் உறைந்தமையால் அவ்வூர் உறையூர் எனப் பெயர் பெறலாயிற்று. அப்போது தன் மாமனிடம் கல்வி, அரசியல், கலைகள் அனைத்தையும் கரிகாலன் கற்றுக் கொண்டான்.

இது இவ்வாறாக, ஒரு சமயம் இரும்பிடர்த்தலையார் மதுரை சென்றிருந்தார். தக்க சமயம் பார்த்திருந்த வளவன் தாயத்தார் சிலர் ஒன்றுசேர்ந்து அவனை அரண் மனையிலேயே சிறைசெய்து அரணையும் கைப்பற்றினர். மதுரையிலிருந்து வந்த புலவர் இதைக் கேள்வியுற்றுத் தலைமறைவாக வசிக்க எண்ணிக் கருவூர் சென்று சில காலம் வதியலானார். அங்கிருந்தவாறே வளவனை விடு விக்கப் பல முயற்சிகள் செய்தார். மேலும், வளவன்பால் அன்புகொண்ட குடிமக்கள் வளவனை மீட்க வழி யாது என ஆராய்ந்தனர். இவற்றை அறிந்த தாயத்தார், 'இளவரசன் உயிரோடிருந்தால் நாட்டிற் குழப்பமும், அரசில்லாததால் துன்பங்களும் நேரும்,' என்றெண்ணி அவனைக் கொலை செய்யத் தீர்மானித்தனர். ஆகவே, அவர்கள் அரண்மனையில் தீ வைத்தனர். தீ எரிவது

கண்ட வளவன், 'இது பகைவர்கள் செயல்' என உணர்ந்து பிறரறியாமல் சிறைச்சாலை மதிலில் ஏறிக் குதித்துத் தப்பினான். இந்நிகழ்ச்சியில் அவன் கால்கள் தீப்பட்டுக் கரிந்து போயின. அதுமுதல் திருமாவளவனுக்குக் கரிகாலன் என்ற பெயரும் வழங்கிற்று. சிறையினின்று தப்பிய கரிகாலன், மாமன் கருவூரிலிருப்பதறிந்து அங்குச் சென்று, உறைந்தையில் நிகழ்ந்ததை உரைத்தான்; அவராதரவில் இருந்தான்.

அரண்மனை தீக்கிரையானதை அறிந்த குடிமக்கள், 'ஐயோ, இளவரசன் இறந்திருப்பானோ?' என எண்ணி மிகமிக வருந்தினர். மேலும் தீயிட்ட தீயோர்களை நாட்டைவிட்டு வெளியேற்றவும் முயன்றனர். இவ்வாறு சோழநாடு அரசில்லாமலிருந்தது. இதற்குக் குடிமக்களும் சான்றோரும் கலந்து ஒரு முடிவு செய்தனர். அது "பட்டத்து யானையின் கையில் ஒரு மாலையைக் கொடுத்து வெளியே அனுப்புவோம்; அது யாருடைய கழுத்தில் மாலையைச் சூட்டித் தன் பிடரில் ஏற்றி வைத்துக் கொள்ளுகிறதோ அவரே நமதரசர். அவருக்கே முடி சூட்டுவோம்" என்பது. அவ்வண்ணமே அவர்கள் யானையின் கையில் மாலையைக் கொடுத்துக் கழுமலம் என்ற ஊரிலிருந்து அதனை விடுத்தனர். யானை, பல ஊர்களையும் சுற்றிப் பின் கருவூரை யடைந்தது; அங்கே ஒரு தெருவில் நின்றுகொண்டிருந்த இளவரசன் கழுத்தில் மாலையை இட்டு அவனைத் தூக்கித் தன் பிடரில் வைத்துக் கொண்டு உறையூரை அடைந்தது.

இளஞ்சேட்சென்னியின் புதல்வனும் கரிகாலனுமாகிய இளவரசனே தமக்கு மன்னனாக அமைந்துள்ளான் என்று அறிந்த குடிமக்கள் பெரு வியப்பும், மட்டற்ற மகிழ்ச்சியும் அடைந்தனர். இரும்பிடர்த் தலையாரும் மற்றைச் சான்றோர்களும் இந்நிகழ்ச்சியை எண்ணி

யெண்ணி வியந்து, கடவுளை வாழ்த்திக் கரிகாலனுடன் கருவூரைவிட்டு உறையூரை அடைந்தனர். ஒரு நன்னாளில் கரிகாலன் அரியணை ஏறி முடிபுனைந்தான்.

முடிபுனைந்து பெருநில மன்னனான கரிகாற்சோழன் இரும்பிடர்த் தலையாரைத் தன் அமைச்சராகக் கொண்டு அவரது உரைவழியே செங்கோல் செலுத்தி வரலாயினன்.

| | | | |
|---|---|---|---|
| இயற்பெயர் | முடிபுனை | மதில் | பிடர் |
| தாய்மாமன் | வதியலானார் | தீயோர் | மட்டற்ற |
| உறைந்து | மீட்க | அமைச்சர் | வியந்து |
| அரண் | தாயத்தார் | சான்றோர் | அரியணை |
| தலைமறைவாக | குழப்பம் | பட்டத்துயானை | நன்னாள் |
| கரிந்து | | | |

## வினாக்கள்

1. திருமாவளவன் யாருடைய புதல்வன்? இவனுடைய தாய்மாமன் யார்?
2. உறையூர் என்ற பெயர் எவ்வாறு ஏற்பட்டது?
3. திருமாவளவனின் தாயத்தார் அவனை எப்பொழுது, எங்குச் சிறை செய்தனர்?
4. திருமாவளவனுக்குக் கரிகாலன் என்ற பெயர் எப்பொழுது ஏற்பட்டது?
5. திருமாவளவன் சோழ நாட்டுக்கு எவ்வாறு அரசனானான்?

## பயிற்சி

1. நான் வருகிறேன். நாங்கள் வருகிறோம். நீ வருகிறாய். நீங்கள் வருகிறீர்கள்.—இவ்வாக்கியங்களில் நான், நாங்கள், நீ, நீங்கள் என்ற சொற்களைக் கவனி. பேசுகிறவர்கள் தம்மைக் குறித்துப் பேசும்போது நான், நாங்கள் என்பார்கள்.

நான், யான், நாம், யாம், நாங்கள், யாங்கள்.—இச்சொற்கள் தன்மைப் பெயர் எனப்படும்.

2. முன்னின்று கேட்போரைக் குறிக்கும்போது நீ, நீர், நீங்கள் என்பார்கள். இச்சொற்கள் முன்னிலைப் பெயர் எனப் படும்.

3. தன்மை, முன்னிலை அல்லாத பெயர்கள் எல்லாம் படர்க்கைப் பெயர் எனப்படும்.

(உ - ம்.) அவன், அவள், அவர், அது, அவை, மரம், மாடுகள், மணி முதலியன.

4. பின்வரும் வாக்கியங்களிலுள்ள தன்மை, முன்னிலை, படர்க்கைப் பெயர்ச் சொற்களை எடுத்துக் கூறு :

நீ என்னுடன் விளையாட வருவாயா ?

அவன் எங்களுடன் பேச மாட்டான்.

நீ என் சிநேகிதர்களையும் அழைத்து வா.

அவர்கள் ஓடிப்போனார்கள்.

## 18. மாணவர் சங்க ஆண்டுவிழா

ஈ. ஆர். உயர்நிலைப் பள்ளியின் மாணவர் சங்க ஆண்டுவிழா ஒரு ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் தொடக்க மாயிற்று. ஆயினும் மாணவர்கள் அன்று காலை முதலே சுறுசுறுப்புள்ளவராக விளங்கினர். முற்பகலில் பள்ளிக்கு வந்து படங்கள் மாட்டுதல், தோரணம் கட்டுதல், வர வேற்பு வளைவுகள் அமைத்தல் முதலிய பணிகள் அவர் களால் மிக்க ஊக்கத்துடன் செய்யப்பட்டன.

பிற்பகல் 4 மணிக்கு விழாத் தொடக்கம். ஆயினும் 3 மணி முதலே மாணவரும், பெற்றோரும், மற்றோரும் அணி அணியாக வரத்தொடங்கினர். சரியாக 4 மணிக்கு விழாத் தலைவர், திரு. D. சுந்தரவடிவேல், M.A., L.T. அவர்கள் விழா மண்டபத்துக்கு வந்தார். பள்ளித் தலை வரும், சங்கத் தலைவரும், சங்க அமைச்சரும் விழாத் தலைவரை அன்புடன் வரவேற்று மாலைசூட்டி அவரைத் தலைமையிடத்துக்கு அழைத்துச் சென்று அங்கே அமர்த் தினர். உடனே கடவுள் வணக்கம் பாடப்பட்டது.

பின்னர், பள்ளித் தலைவரால் விழாத்தலைவருக்கு வர வேற்பளிக்கப்பட்டது; சங்கத் தலைவரால் விழாத் தலை வருக்கு வரவேற்புத்தாள் படித்தளிக்கப்பட்டது. சங்க அமைச்சர் ஆண்டு விழா அறிக்கையைப் படித்தார். அவ்வறிக்கையில் ஆண்டு முழுவதும் சங்கம் செய்த பணிகளும் மாணவர்கள் அமைச்சரோடு ஒத்துழைக்கச் சங்கச் செயல்களில் கலந்து கொண்டமையும் கூறப் பட்டிருந்தன. இதனோடு கற்றறிந்த வெளியார் பலர் சங்கத்துக்கு எழுந்தருளித் தங்கள் அறிவுரைகளை வழங் கியது பற்றிக் குறிப்பிடப்பட்டிருந்தது.

பின்பு, விழாத்தலைவர் இனிமையாகவும் எடுப்பாக

வும் அமைந்த தமது சொற்பொழிவைக் "கேட்போர்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வெட்ப மொழிவதாம் சொல்" என்பதற்கேற்ப உள்ளத்தினின்று அள்ளி அள்ளி வழங்கினர். தலைவரது ஆங்கில அறிவு, தமிழறிவு, அனுபவங்கள் ஆகிய அனைத்தும் அவரது விரிவுரைக்குத் தனிச் சிறப்பை அளித்தன.

அதன் பின்னர், ஆங்கிலத்தில் ஒன்றும் தமிழில் ஒன்றுமாக இரண்டு பெரிய விரிவுரைகள் நடைபெற்றன. பின்பு மூன்று மாணவர்கள் தமிழ், ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகளில் முறையே பத்து நிமிடம் பேசினர். மேலும் கால்மணி நேரம் நடைபெற்ற ஒரு நாடகமும் எல்லோர் மனத்தையும் கொள்ளை கொண்டது.

இறுதியாகச் சங்க அமைச்சர் விழாத் தலைவருக்கும், விரிவுரையாளர்களுக்கும், பெற்றோர்களுக்கும், மற்றவர்களுக்கும் அவர்கள் விழாவுக்கு வந்திருந்து சிறப்பித்தமைக்குச் சங்கத்தினரின் ஆழ்ந்த அன்பையும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொண்டார். கூட்டத்தினருக்குச் சந்தனம், பூ முதலியவை வழங்கியபின், நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிவடைந்தது.

| | | |
|---|---|---|
| ஆண்டுவிழா | அமர்த்தினர் | பிணிக்கும் |
| தொடக்கம் | வரவேற்புத்தாள் | வேட்ப |
| தோரணம் | எழுந்தருளி | உள்ளம் |
| வரவேற்பு வளைவு | அறிவுரைகள் | அனுபவம் |
| அணிஅணியாக | எடுப்பாக | விரிவுரை |
| கொள்ளைகொண்டது | சிறப்பித்தமை | நன்றியறிதல் |

### வினாக்கள்

1. மாணவர் சங்க ஆண்டு விழாவின்போது, மாணவர்கள் பள்ளியை எவ்வாறு அழகுபடுத்தினர்?

2. ஆண்டு விழா நடைபெற்ற முறையைச் சுருக்கமாக எழுது.

3. உங்கள் பள்ளிக்கூடத்தில் நடைபெற்ற ஆண்டு விழா ஒன்றினைப் பற்றி ஒரு பத்தி எழுது.

### பயிற்சி

1. பின்வரும் பெயர்ச் சொற்களில் ஒவ்வொன்றும் இன்ன வகையைச் சேர்ந்தது என்று குறிப்பிடுக.

சாலை, பொருமை, வேகம், கிளி, மயில், சுறுசுறுப்பு, வயல், பலம், தோலா, வெளிச்சம், நாய், எலி, இருட்டு, அடக்கம், தோட்டம், எருமை, பொறுமை, இவைகள், எவன், வழுக்கு, யாவை, நடை, உறக்கம், பேசுதல், உழவு, அவுன்சு, ஓட்டம், சோம்பல், இனிமை, மயில், பூ, வருடம், சித்திரை, ஏப்ரல், மஞ்சள், சிவப்பு, நகம், கால், முகம், இதழ்.

2. பின்வரும் வாக்கியங்கள் ஒவ்வொன்றையும் இரண்டு வாக்கியங்களாகப் பிரித்து எழுது :—

(1) இவரது முன்னோர் நவாபுகளிடம் உத்தியோகம் செய்து பெரும் பொருள் தேடியிருந்தார்கள்.
(2) செல்வம் நிறைந்த குடும்பத்தில் பிறந்தவராகையால் உத்தியோகம் தேடவேண்டும் என்ற அவசியம் அவருக்கு இல்லை.

## 19. கப்பலோட்டிய தமிழன் நினைவு

மடமையதோ பிறநாட்டர் மயக்கந் தானோ
மக்களெல்லாம் சுதந்திரத்தை மறந்தா ராகி
அடிமையிருள் நள்ளிருளாய் அனைத்தும் மூடி
யார்தலையும் நீட்டவொண்ணு அந்த நாளில்
திடமனத்துச் சிதம்பரப்பேர்ப் பிள்ளை யாவார்
செய்திருக்கும் அச்சமற்ற சேவை சொன்னுல்
உடல்சிலிர்க்கும் ; உயிர்நிமிர்ந்தே யுணர்ச்சி பொங்கும் ,
உள்ளமெல்லாம் நெக்குநெக்காய் உருகு மன்றே !

—நாமக்கல் கவிஞர்

| | | |
|---|---|---|
| மடமை | நீட்டவொண்ணு | திடமனம் |
| மயக்கம் | சிலிர்க்கும் | நெக்குநெக்காய் |

### வினுக்கள்

1. சிதம்பரனுர் வாழ்ந்த காலத்தைப் பற்றி இரண்டு வாக்கியங்கள் எழுதுக.

2. சிதம்பரனுர் செய்த வீரச் செயல் நம்மில் எத்தகைய உணர்ச்சிகளை எழுப்பும்?






## 20. மல்லனை வென்ற தெனாலிராமன்

கிருஷ்ணதேவ ராயரின் சபையில் அப்பாஜி என்ற அறிவாளி மந்திரி இருந்ததுபோல, வேடிக்கையாகப் பேசி எல்லோரையும் மகிழ்வித்த தெனாலிராமனும் இருந்தான். இவனைப்பற்றிய பல கதைகளை நீங்கள் படித்திருக்கலாம்.

ஒருநாள் சபையில் கிருஷ்ணதேவராயரும் பிரபுக்களும் கூடியிருந்தார்கள். வடநாட்டிலிருந்து வந்திருந்த மற்போர் வீரன் ஒருவனும் இருந்தான். அவன் பல வீரர்களுடன் சண்டையிட்டு வென்று பதக்கங்களையும் பரிசுகளையும் பெற்றிருந்தான். அவன் "அரசே! என்னுடன் போரிடத் துணிவுள்ள வீரர்களை வரச் சொல்லுங்கள்," என்று மார் தட்டினான்.

வடநாட்டு மல்லனின் வலிமைமிக்க தோற்றத்தைப் பார்த்து, சபையில் இருந்த வீரர்கள் அஞ்சினார்கள்.

துணிவில்லாமல் ஒருவரையொருவர் பார்த்துக்கொண் டார்கள்.

இதை, ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த தெனாலிராமன் பார்த்தான். விஜயநகரத்தின் பெருமையை நிலைநாட்ட வேண்டும் என்று கருதி, உடனே இடத்தை விட்டு எழுந் தான். "அரசே! இவருடன் போரிட எனக்கு அனுமதி அளியுங்கள், ஒரே குத்தில் வென்று விடுகிறேன்," என்று தோள்களைத் தட்டினான், தெனாலிராமன்.

வடநாட்டு மல்லன், "குச்சி போலிருக்கும் இவனா நம்மை வெல்லப் போகிறான்?" என்று எண்ணிச் சிரித் தான்.

தெனாலிராமன், "மல்வீரனே! நீ ஏன் சிரிக்கிறாய்? நீ மற்போரைக் கற்றுக் கொண்டிருக்கிறாயா? அல்லது மனம் போனபடி போர் செய்வாயா? எனக்கு மற்போர் முறை முழுவதும் தலைகீழ்ப் பாடம். உன்னை ஒரு நொடி யில் வென்று விடுவேன்," என்று கையைச் சொடுக்கிச் சொன்னான்.

மல்லனும், "ஆகா! நானும் படித்திருக்கிறேன்," என்றான்.

உடனே தெனாலிராமன் ஒரு குதி குதித்தான். கை விரல்களை மூடி, முட்டியை மடித்து ஆத்திரத்தோடு தன் நெஞ்சில் குத்திக் கொண்டான். பின், இரண்டு கைகளை மேலே தூக்கி விரித்துக் காண்பித்தான். பிறகு இடது கையின் ஆள்காட்டி விரலால் தன் கழுத்தை வட்டமாகச் சுற்றிக் காட்டினான்; வலக்கையை இடுப்பு உயரம் வரை கவிழ்த்தான். பின்பு வலக் கையை முன்னும் பின்னும் ஆட்டிக் காண்பித்தான்.

"வீரனே! நான் செய்தவைகளுக்கு என்ன பொருள்?" என்று கேட்டான்.

தெனாலிராமன் செய்த சைகைகளுக்குப் பொருள்

சொல்லத் தெரியாமல் அந்த மூடமல்லன் விழித்தான். “ நாளைக்குச் சொல்கிறேன் ” என்று நடுங்கிக் கொண்டே சொன்னான். ஆனால் அன்று இரவே அவன் தன் நாட்டிற்கு ஓடிவிட்டான் என்று இராயரிடம் ஒற்றர்கள் செய்தி சொன்னார்கள்.

மறு நாள் இராயர் மிக்க வியப்புடன், “ ராமா ! உன் கைவரிசையால்தான் அவன் ஓடிவிட்டானோ? நீ செய்த சைகைகளுக்கு என்ன பொருள் ?” என்று கேட்டார்.

அதற்குத் தெனாலிராமன், “அரசே! அது ஒரு பெரிய வேலையல்ல. ‘உன்னுடன் நான் போரிட்டால், நீ குத்தியதும் நான் இறந்து விடுவேன். இரண்டு கைகளை விரித்தபடி மல்லாந்து தரையில் விழுவேன். அவ்வாறு உன்னால் நான் இறந்து போனால் என் மனைவியையும் மக்களையும் யார் காப்பாற்றுவார்கள் ?’ என்று நான் மனத்தில் நினைத்தேன். அதையே சைகையால் காட்டினேன், இவ்வளவுதான் அரசே !” என்றான், ராமன்.

இராயர், “ அந்த முரடனை முட்டாள் வீரனை, உன் அறிவுக் கூர்மையால் வடநாட்டுக்கே ஓட்டி விட்டாயே! உன் அறிவை மெச்சுகிறோம்,” என்று சிரித்துக்கொண்டே சொன்னார். சபையோரும் சிரித்தனர்.

| | | |
|---|---|---|
| அறிவாளி | நிலைநாட்ட | சைகை |
| பதக்கம் | மனம்போனபடி | ஒற்றர்கள் |
| மல்லன் | சொடுக்கி | கைவரிசை |
| மற்போர் | முட்டி | மல்லாந்து |
| மார் தட்டினான் | ஆத்திரம் | மெச்சுகிறோம் |

### வினாக்கள்

1. தெனாலிராமன் எவ்விதத்தில் திறமை பெற்றிருந்தான் ?
2. வடநாட்டு மல்லனைப் பார்த்து, கிருஷ்ணதேவராயரின் சபையிலிருந்த வீரர்கள் ஏன் அஞ்சினார்கள் ?

3. தெனாலிராமன் மல்லனிடம் என்ன கேட்டான்?

4. தெனாலிராமன் மல்லனை நோக்கி என்ன சைகை செய்தான்?

5. மல்லன் இரவிலேயே தன் ஊருக்கு ஏன் ஓடிவிட்டான்?

6. தெனாலிராமன் செய்த சைகைகளுக்குப் பொருள் என்ன?

## பயிற்சி

1. இந்திரன், கண்ணாடி, கண்ணன், சிங்கம், கண்ணகி, வாழை, தீ, பெண்கள், பையன்கள், ஊரார், மரங்கள், கற்கள்— இப்பெயர்ச் சொற்களைக் கவனி.

இவற்றுள் இந்திரன் என்பது தேவர்களுள் ஒருவர் பெயரைக் குறிக்கிறது. கண்ணன் என்ற சொல் மனிதர் இனத்தில் ஓர் ஆணைக் குறிக்கிறது. கண்ணகி என்ற சொல் மனிதர் இனத்தில் ஒரு பெண்ணைக் குறிக்கிறது. பெண்கள் என்ற சொல் பல பெண்களையும், பையன்கள் என்ற சொல் பல ஆண்களையும், ஊரார் என்பது ஆண்களும் பெண்களும் சேர்ந்த பலரையும் குறிக்கின்றன.

மனிதர் பெயரையும், தேவர் பெயரையும் குறிக்கும் சொற்கள் உயர்திணை என்று சொல்லப்படும். உயர்திணையில் ஓர் ஆணைக் குறிக்கும் சொல் ஆண்பால் எனப்படும்; ஒரு பெண்ணைக் குறிக்கும் சொல் பெண்பால் எனப்படும்; பலரைக் குறிக்கும் சொல் பலர்பால் எனப்படும்.

2. பின்வரும் வாக்கியங்களிலுள்ள உயர்திணைப் பெயர்ச் சொற்கள் எவை? ஒவ்வொன்றும் எந்தப் பாலைச் சேர்ந்தது?

(1) கந்தன் ஆடு மேய்க்கிறான்.

(2) சுந்தரி பாட்டுப் பாடுகிறாள்.

(3) இவர்கள் நூல் நூற்கிறார்கள்.

(4) ஆண்களும் பெண்களும் படிக்க வேண்டும்.



## 21. கரும்பு

“ கரும்பு தின்னக் கூலி வேண்டுமோ ?” என்ற பழமொழியை யாவரும் அறிவர். இனிப்பான பொருளை எல்லோரும் விரும்புவாரல்லவா ? அதனால்தான் நீங்களும் கரும்பு தின்ன விரும்புகிறீர்கள்.

கரும்பு புல்லினத்தைச் சேர்ந்தது. அது ஓர் அங்குலம் முதல் மூன்றங்குலம் வரை குறுக்களவும், ஆறடி முதல் பதினைந்து அடி வரை உயரமும் உள்ளதாக வளரும்; நீண்டு திரண்ட மூங்கிற்கழி போலிருக்கும். அதனால் அதைக் கருப்பங்கழி என்று கூறுவார்கள். கரும்பில் பல கணுக்கள் உண்டு. ஒவ்வொரு கணுவிலிருந்தும் ஓர் இலை தோன்றி அடுத்த கணுவைச் சூழ்ந்து தென்னை ஓலை போல் வளரும். இதற்குக் கருப்பந்தோகை என்று பெயர். முதிர்ந்த கரும்பு வெண்ணிறப் பூக்களைப் பூக்

கும். கரும்பின் அடிப்பகுதி மிக்க இனிப்பாயிருக்கும். மேலே போகப்போக இனிமை குறைந்து உவர்ப்பு மிகுந்துவரும். நுனியில் கொழுத்தாடையில் இனிப்பே இராது ; உப்புக் கரிக்கும்.

வெண் கரும்பு, செங்கரும்பு, நாமக் கரும்பு, இரச தாளிக் கரும்பு, நாணற் கரும்பு எனக் கரும்பில் பலவகை உண்டு. நாணற் கரும்பில் சாறு குறைவு ; சாறும் சுவை யற்றது. இதற்குப் பேய்க் கரும்பு என்றும் பெயர். நாமக் கரும்பு, இரசதாளிக் கரும்பு இவற்றில் சாறு அதிகம் ; இனிப்பாயும் இருக்கும். ஆனால் வெண்கரும்பு, செங் கரும்பு இவற்றின் சாறே மிக்க இனிப்பானது. இவற் றின் சாற்றில் சர்க்கரைச்சத்து அதிகம் உண்டு. இவ் வகைக் கரும்புகளே சர்க்கரை செய்யப் பயன்படுகின்றன.

செழிப்பும், நீர்வளமும், மிதமான வெப்பமும் உள்ள நிலப்பகுதிகளில் கரும்பு நன்றாகப் பயிராகும். விதையின் மூலம் கரும்பு பயிராவதில்லை. கணுவிலுள்ள முளையே கரும்பாகும். நிலத்தை உழுது பண்படுத்திப் பாத்தி கட்டுவார்கள். கரும்பை ஒவ்வொரு துண்டிலும் மூன்று கணுக்கள் இருக்குமாறு துண்டு துண்டாக வெட்டிக் கணுக்கள் மண்ணில் பதியும்படி பாத்திகளில் நடுவார்கள். ஒவ்வொரு கணுவிலும் முளை தோன்றி, வேரூன்றிக் கரும்பாக வளரும். கரும்பு வளரும் நிலத் தைக் ‘ கருப்பங்கொல்லை ’ அல்லது ‘ கரும்புத் தோட்டம்’ என்று கூறுவர்.

கரும்பு முற்றிப் பூக்கும் பருவம் அடைய ஏறத்தாழ ஒன்பது மாதம் செல்லும். அப்பருவமே கரும்பை வெட்ட ஏற்றது. ஆகவே பூக்கும் பருவம் வந்ததும் கருப்பங் கழிகளை வெட்டி ஆலைக்குக் கொண்டு போவார்கள். ஆலை அமைந்துள்ள இடம் ஆலைக்கூடம் எனப்படும்.

ஆலையில் கரும்பின் தோகையைக் களைந்தபின் துண்டுகளாக வெட்டிக் கொள்வார்கள். ஓர் எந்திரத்தில் மரம் அல்லது இரும்பினால் ஆன உருளைகள் இருக்கும். அவ்வுருளைகளோடு இணைந்த நீண்ட மர விட்டத்தை மாடுகள் வட்டமாக இழுத்துச் சுற்றும்; இதனால் உருளைகள் சுழலும். உருளைகளிடையே கரும்பைச் செருகுவார்கள். கருப்பங்கழி நசுக்கப்பட்டுச் சாறு வேறாயும் சக்கை வேறாயும் பிரியும்.

கருப்பஞ்சாறு சிறிது தடிப்பாயும் மங்கிய வெண்மையாயும் இருக்கும். இச்சாறு எந்திரத்தின் அடியிலுள்ள கூனில் வடியும். இவ்விதம் சேகரித்த சாற்றைப் பெரிய இருப்புக் கொப்பரைகளில் விட்டு அதற்கென உள்ள அடுப்பில் வைத்துக் காய்ச்சுவார்கள். உலர்ந்த சக்கையை அடுப்பெரிக்கப் பயன்படுத்துகிறார்கள். காய்ச்சும்போது சுண்ணாம்பு நீரைச் சேர்ப்பார்கள். இதனால் கருப்பஞ் சாற்றிலுள்ள அழுக்குகள் நுரையாக மிதக்கும். நுரையை எடுத்துவிடுவார்கள்.

சாறு சுண்டிப் பதமானதும் 'பாகு' என்ற பெயர் பெறும். இதை மரத் தொட்டிகளில் ஊற்றி ஒருவகைத் துடுப்பால் ஆற்றுவார்கள். ஆற, ஆறப் பாகு இறுகும். மரப்பலகையால் இரண்டு மூன்று முறை அப்பாகைத் தேய்த்தால் இறுகிய பாகு சர்க்கரையாகும். பாகு இறுகுவதற்குள் மர அச்சுகளில் வார்த்தால் வெல்லமாகும். பாகை உருட்டி வைப்பதும் உண்டு. இவை அச்சு வெல்லம், உருண்டை வெல்லம் எனப்படும். இவை பழுப்பாக இருக்கும்.

பழுப்புச் சர்க்கரையை நீரில் கரைத்து வடிகட்டி சோடா சேர்த்துக் காய்ச்ச வேண்டும். இந்தக் கரைசலிலிருந்து வெள்ளைச் சர்க்கரையும் கற்கண்டும் செய்யப்படுகின்றன.

கிராமங்களில் சிறிய அளவில், ஆலைகளில் வெல்லம் காய்ச்சப்படுகிறது. கரும்பு மிகுதியாகப் பயிராகும் இடங்களில், பெரிய சர்க்கரை ஆலைகள் உள்ளன. நம் இராச்சியத்தில் நெல்லிக்குப்பத்தில் சர்க்கரை ஆலை ஒன்று உள்ளது. அங்கே கரும்புகள் எந்திரங்களால் விரைவில் பிழியப்படுகின்றன. அதனால் கருப்பஞ்சாறு அதிகமாகக் கிடைக்கும். அங்கேயே எந்திரங்களால் வெல்லம், சர்க்கரை, கற்கண்டு ஆகியவை பெரிய அளவில் செய்யப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| புல்லினம் | வெல்லம் | சக்கை | பாகு |
| குறுக்களவு | களைந்த | பழுப்பு | துடுப்பு |
| கொழுத்தாடை | மரவிட்டம் | கூன் | கற்கண்டு |
| வேரூன்றி | செருகு | கொப்பரை | |
| ஆலை | நசுக்கப்பட்டு | சுண்டி | |

## வினாக்கள்

1. வளர்ந்த கரும்பு எப்படி அமைந்திருக்கும்?
2. கரும்பு பயிரிட ஏற்ற நிலம் எது?
3. கரும்பின் வகைகளைக் கூறு. அவற்றில் சர்க்கரை செய்ய ஏற்ற கரும்புகள் யாவை?
4. கரும்பு பயிரிடுவது எப்படி?
5. கரும்பிலிருந்து வெல்லம் எப்படிச் செய்யப்படுகிறது?
6. வெல்லத்திலிருந்து சர்க்கரையும் கற்கண்டும் எப்படிச் செய்யலாம்?

## பயிற்சி

1. சிங்கம், வாழை, தீ—இப்பெயர்ச் சொற்களைக் கவனி. இவைகள் மனிதர் அல்லாத பொருள்களில் ஒன்றைக் குறிக்

கின்றன. மரங்கள், பசுக்கள் என்ற பெயர்ச் சொற்கள் மனிதர் அல்லாத பொருள்களில் பலவற்றைக் குறிக்கின்றன.

மனிதர் அல்லாத மற்ற எல்லா உயிருள்ள பொருள்களும் உயிரில்லாத பொருள்களும் அஃறிணை என்று சொல்லப்படும். (அஃறிணை=உயர்வு அல்லாத திணை, திணை=சாதி, வகுப்பு.) (அஃறிணையில் ஒன்றை குறிப்பது ஒன்றன்பால் ஆகும். பல வற்றைக் குறிப்பது பலவின்பால் ஆகும்.)

2. பின்வரும் வாக்கியங்களில் அஃறிணைப் பெயர்களை எடுத்துக் கூறு. ஒவ்வொன்றும் எந்தப் பாலைச் சேர்ந்தது என்று சொல்லு.

(1) ஓநாய் ஆடுகளைக் கொல்லும்.

(2) முருகன் புறாக்களை வளர்க்கிறான்.

(3) பாம்பு சீறுகிறது.

(4) மரத்தில் இலைகளைப் பார்.

# 22. பெண்ணின் உரிமைகள்

மங்கைய ராகப் பிறப்பதற்கே—நல்ல
மாதவஞ் செய்திட வேண்டும், அம்மா !
பங்கயக் கைநலம் பார்த்தலவோ—இந்தப்
பாரில் அறங்கள் வளரும், அம்மா. (1)

அல்லும் பகலும் உழைப்பவர்யார் ?—உள்ளத்
தன்பு ததும்பி எழுபவர்யார் ?
கல்லுங் கனியக் கசிந்துருகித்—தெய்வக்
கற்பனை வேண்டித் தொழுபவர் யார் ? (2)

சின்னஞ் சிறிய வயதினிலே—ஈசன்
சேவடிக் கன்பெழச் செய்பவர் யார் ?
உன்னும் இளமைப் பருவமெலாங்களிப்
புள்ளம் பெருகிடச் செய்பவர் யார் ? (3)

அன்பினுக் காகவே வாழ்பவர் யார் ?—அன்பில்
ஆவியும் போக்கத் துணிபவர் யார் ?
இன்ப உரைகள் தருபவர் யார் ?—வீட்டை
இன்னகையா லொளி செய்பவர் யார் ? (4)

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

| | | | |
|---|---|---|---|
| மாதவம் | ததும்பி | சேவடி | துணிபவர் |
| பங்கயம் | கனிய | உன்னும் | இன்னகை |
| பாரில் | கசிந்து | ஆவி | அன்பெழ |
| அல்லும் | ஈசன் | | |

### வினாக்கள்

1. பாரில் அறங்கள் எவ்வாறு வளர்கின்றன ?
2. குடும்பத்தினருக்குப் பெண்கள் எவ்வாறு உதவுகின்றனர் ?



## 23. தாகூரின் இளகிய நெஞ்சம்

இந்தியாவின் வடகிழக்கில் வங்காளம் என்ற இராச்சியம் இருப்பதைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக் கலாம். அதன் தலைநகரம் கல்கத்தா. அங்குச் சில ஆண்டுகளுக்கு முன் ரவீந்திரநாத் தாகூர் என்ற கவிஞர் வாழ்ந்திருந்தார். இவர் உலகம் புகழும் அரிய கவிதை களையும், கதைகளையும் எழுதியுள்ளார்.

ஒரு சமயம் தாகூரும் அவர் மனைவி மிருணாளினியும் கல்கத்தாவிலிருந்து அவர்களது சொந்த ஊருக்குப் போயிருந்தார்கள். அவர்களுடன் படிகன் என்ற வேலை யாளும் போயிருந்தான்.

தாகூரின் ஊரில் பலாப்பழம் ஏராளமாய்க் கிடைக்கும்; அது மிக்க சுவையாயும் இருக்கும். ஒருநாள் மிருணாளினி

வேலைக்காரனிடம், "படிகா! நீ போய் நல்ல பலாப்பழம் ஒன்று வாங்கிவா," என்று அனுப்பினுள்.

கடம்பன் என்ற தோட்டக்காரனிடம் சென்று படிகன் ஒரு பலாப்பழம் கேட்டான். படிகனைப் பார்த்த கடம்பன், "படிகா! ஐயா வந்திருக்கிருரா? என்ன வேண்டும்?" என்று கேட்டான். படிகன், "ஒரு பலாப்பழம் வேண்டும். வாங்கிவரச் சொன்னுர்கள்," என்ருன்.

கடம்பன் தாகூரிடம் மிகுந்த அன்பு கொண்டவன். ஆதலால் காசு எதுவும் கேளாமல் ஒரு பலாப்பழம் கொடுத்தான்.

படிகன் பழத்தை எசமானியிடம் கொண்டு தந்தான்.

தாகூருக்குப் பலாப்பழத்தில் அவ்வளவு விருப்பம் இல்லை. எனினும், அன்று சிறிது தின்று பார்த்த அவர், மறுநாளும் பலாப்பழம் இருக்கிறதா என்று மனைவியைக் கேட்டார்.

மறுநாள் மிருணுளினி, "படிகா! நாம் இந்த ஊரில் இருக்கும்வரை தினம் ஒரு பழம் வாங்கிவா. பழத்துக்கு நாலணுவீதம் தோட்டக்காரனுக்குக் கொடு," என்ருள். அது முதல் படிகன் இனுமாகப் பழத்தைக் கடம்பனிடம் வாங்கிக்கொண்டுபோய் எசமானியிடம் கொடுத்து, நாலணுவைத் தானே எடுத்துக்கொண்டான்.

ஒருநாள், படிகனுக்கு உடல்நலம் சரியாயில்லை. புதிதாக ஒரு வேலைக்காரன் வந்தான். அவன் எசமானி யிடம் காசு வாங்கிக் கொண்டுபோய்க் கடம்பனிடம் கொடுத்துப் பழம் கேட்டான்.

கடம்பன் இதுவரை காசு வாங்கியதில்லை யாகையால் இப்போது காசு வாங்க மறுத்துவிட்டான். இதனுல் புதிய வேலையாளுக்குப் படிகன் செய்துவந்த திருட்டுத்தனம் தெரிந்துவிட்டது. உடனே அவன், தினந்தோறும் படிகன் காசு திருடியதை எசமானியிடம் சொல்லிவிட்டான்.

மிருணுளினி இதைக் கேட்டதும் கடுஞ்சினம் கொண்டாள். தாகூரிடம் விவரமாகச் சொன்னுள். அவரும் கோபத்துடன், "நீ போய்ப் படிகனேயும் தோட்டக்காரனேயும் அழைத்து வா," என்று புதிய வேலையாளிடம் கூறி அனுப்பினுர். கடம்பனும், படிகனும் வந்தார்கள்.

தாகூர், "நீதான் பலாப்பழம் தரும் கடம்பனு?" என்று கேட்டார்.

கடம்பன், "ஆம்! தங்களுக்கு நாள்தோறும் ஒரு பலாப்பழம் அனுப்பி வந்தேனே! பழங்கள் நன்ருக இருந்தனவா?" என்று ஆவலோடு கேட்டான்.

தாகூர், "பழங்கள் நன்ருயிருந்தன. படிகன் பழத்திற்குக் காசு தருவானு!" என்று கேட்டார். கடம்பன், "எசமான் கிட்டே காசு வாங்குவேனு?" என்று பணிவுடன் சொன்னுன்.

"படிகா! இப்படி எத்தனே நாட்கள் திருடினுய்? என் முன் நில்லாதே போ!" என்று தாகூர் சினத்துடன் கூறினுர். படிகன் வெட்கத்தால் தலேகுனிந்து அப்பால் போனுன்.

அன்று இரவு தாகூர் தம் அறையில் தனியாக உட்கார்ந்திருந்தார். அப்போது படிகன் கண்ணீருடன் வந்து தாகூரின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டான்.

தாகூரின் நெஞ்சம் படிகனேக் கண்டதும் இளகியது.

"படிகா! உன் தவற்றை உணர்ந்து திருந்தினுல் உன்னே மன்னிக்கிறேன். இனி இங்கேயே நல்ல வேலேக்காரனுக இரு," என்று கவிஞர் அவனே மன்னித்தார்.

| | | | |
|---|---|---|---|
| இராச்சியம் | தலேநகரம் | திருட்டுத்தனம் | தலேகுனிந்து |
| அரிய | இனுமாக | கடுஞ்சினம் | நெஞ்சம் |
| கவிதை | காசு | வெட்கம் | இளகியது |

## வினாக்கள்

1. தாகூர் எதனால் புகழ் பெற்றார்?

2. படிகன் என்பவன் யார்? அவன் செய்த திருட்டுத்தனம் என்ன?

3. படிகனுடைய திருட்டு எப்படி வெளிப்பட்டது?

4. தாகூர் படிகனுக்கு என்ன தண்டனை அளித்தார்? எப்பொழுது மன்னித்தார்?

## பயிற்சி

1. உயர்திணைப் பெயர்கள் ஐந்து சொல்லு. அஃறிணைப் பெயர்கள் ஐந்து சொல்லு.

2. பின்வரும் பெயர்ச் சொற்கள் எந்தெந்தப் பாலைக் குறிக்கின்றன?

பழங்கள், மீன், பாறை, மண், வணிகன், உழவர்கள், பெண்கள், சிறுவர்கள், குருவி, கோழிகள்.



## 24. ஒரு மானின் தியாகம்

ஓர் அழகிய மலைச்சாரலில் சுவேதன் என்ற மான், ஆயிரம் மான்களின் அரசனாக விளங்கியது. அது கண்டோர் கண்ணையும், கருத்தையும் கவர்கின்ற பேரழகும், மிக்க வீரமும் உடையது. தன் கடமையை நன்குணர்ந்து ஒரு சிறு மான்குட்டியும் பகைவர் கையில் அகப்படாமல் மிக்க கவனமாகத் தன் இனத்தைக் காத்தது.

ஒருநாள் மலைச்சாரலில் வேட்டையாட ஒரு வேடன் வந்தான். அங்குச் சுவேதனும், அதனுடன் ஆயிரம் மான்களும் கூட்டமாக இருத்தலைக் கண்டான். உடனே, அவன் மலைநாட்டரசனான வீரகேது என்பவனிடம் போய், "அரசே! நம் மலைச்சாரலில் மின்னலைப்போல் துள்ளும் அழகான வெண்மான் ஒன்று ஆயிரம் மான்களுக்குத் தலைமை தாங்கி வாழ்கிறது. அதைப்போன்ற அழகிய

மானை நான் இதுவரை கண்டதில்லை,'' என்றான். அது கேட்ட வீரகேது வேடர்களோடும், வீரர்களுடனும் காடு சென்று வேட்டையாடி சுவேதனை உயிருடன் பிடித்துவர நினைத்தான்.

மறுநாள் அரசன் ஆணைப்படி ஆயிரம் வேடர்களும், ஆயிரம் வீரர்களும் அணிவகுத்து நின்றனர். அரசன் குறித்த காலத்தில் வேடர்களும் வீரர்களும் சூழச் சென்று, சுவேதன் வாழ்ந்த காட்டை வளைத்துக்கொண் டான். காட்டின் தென்திசையில் ஒரு பெரிய காட்டாறு மிக்க வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. அது அகல முடையதல்லவாயினும், அதைக் கடப்பது எளிதாக இல்லை. ஆகவே, அங்கு மட்டும் வேடர்கள் காவல் புரிய வில்லை.

பகைவர் வந்து காட்டை வளைத்துக்கொண்டதை சுவேதன் உணர்ந்தது. அது தன் இனத்தைக் காக்கத் தீர்மானித்தது. காட்டாறு வறண்டிருக்கும் காலத்தில், மான்கள் எளிதாக ஆற்றைக் கடந்து மறுகரையிலுள்ள காட்டில் புகுந்துகொள்ளும். இப்பொழுதோ அதைக் கடப்பது எல்லா மான்களுக்கும் எளிதாயில்லை. மேலும், அதைக் கடக்கமுடியாத சிறு குட்டிகளும் இருந்தன. எப்படியும் மான்களைக் காப்பாற்ற வேண்டுமென்பது சுவேதனின் நோக்கம். ஆகவே, அது திடீரென ஆற்றில் குதித்து நடுவில் நின்றுகொண்டது.

உடனே மற்ற மான்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அதன் முதுகில் தமது முன்னங்கால்களை ஊன்றித் தாவிக் குதித்து அக்கரை சேர்ந்தன. ஆயிரம் மான்களும் இப் படியே அதன் முதுகில் தம் காலை ஊன்றியூன்றி அமுத் தியதால் சுவேதனின் முதுகெலும்பு ஒடிந்தது. மேல்தோல் கிழிந்து இரத்தம் பெருகியது. சுவேதன் இவற்றையெல் லாம் பொருட்படுத்தாமல் அப்படியே நின்றது. இறுதி

யாக, ஒரு சிறு மான்குட்டி சுவேதனின் முதுகில் குதித்து மறுகரை சேரமுடியாமல் தத்தளித்தது. உடனே சுவேதன் அம் மான்குட்டி தனது உடலை உறுதியாகப் பற்றிக் கொள்ளுமாறு செய்து சுமந்தவாறு நீந்தி மறுகரையை அடைந்தது. முதுகிலிருந்த மான்குட்டி கரையில் குதித்ததும், சுவேதன் கீழே விழுந்து உயிர் நீத்தது. சுவேதன் மரித்தது கண்ட மற்ற மான்கள் கண்ணீர் விட்டுச் சுவேதனைப் பரிவோடு முத்தமிட்டு அகன்றன.

இவையனைத்தையும் அரசனும் அவனோடு வந்த வேடர்களும் வீரர்களும், தூரத்திலிருந்தவாறே கவனித்துக் கொண்டிருந்தனர். அரசனைப் பார்த்ததும், ஆயிரம் மான்களும் அவ்விடத்தைவிட்டு ஓடிக் காட்டிற்குள் புகுந்து மறைந்தன. ஒரு விலங்கு கடமையுணர்வோடு தன் அரச பதவிக்கேற்பப் பணிசெய்ததைப் பார்த்த அரசன் வியப்பும் விம்மிதமும் அடைந்தான். சற்று நேரம் அசைவற்று நின்றான்.

பின்னர், அரசன் வேடுவர் சிலரை மறுகரைக்கனுப்பி அங்கே பிணமாகக் கிடந்த சுவேதனைத் தூக்கிவரச் செய்தான். என்ன வியப்பு! சுவேதனுடைய உடல் முழுவதும் பொன்னிறமாக மாறியிருந்தது! வீரகேது, மான் அரசை அங்கேயே அடக்கம் செய்து, அதன்மேல் அழகிய கோயில் ஒன்றையும் கட்டினான்.

மலைச்சாரல் பிணம் முதுகெலும்பு உயிர்நீத்தது
கவர்கின்ற வளைத்துக்கொள் பணிசெய் மரித்தது
இனம் காட்டாறு அடக்கம் பரிவோடு
ஆணைப்படி தீர்மானித்தது பொருட்படுத்து விம்மிதம்
அணிவகுத்து நோக்கம் பற்றிக்கொள் விலங்கு
கடமையுணர்வு

## வினாக்கள்

1. சுவேதனை உயிருடன் பிடித்துவர வீரகேது ஏன் ஆசை கொண்டான்?

2. வீரகேதுவும் வேடர்களும் காட்டின் ஒரு பக்கத்தை ஏன் வளைத்துக்கொள்ளவில்லை?

3. எல்லா மான்களும் காட்டாற்றைக் கடப்பதற்கு, சுவேதன் எவ்வாறு உதவியது?

4. சுவேதன் இறந்தபின் வீரகேது என்ன செய்தான்?

## பயிற்சி

1. பால்கள் எவை?

2. பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்களுக்குத் திணையும் பாலும் கூறு.

(1) பாலா, மணி அடி.
(2) வேடன் பறவைகளைப் பிடிக்கிறான்.
(3) ஓநாய் ஆட்டைக் கொன்றது.
(4) தாய் பிள்ளைகளை வளர்க்கிறாள்.



## 25. வழிப்போக்கன்

வழிப்போக்கன் ஒருவன் மிகக்
களைப்படைந்தே வழியில்
செழிப்பான ஆலின்கீழ்
சில நிமிடம் படுத்தான். (1)

படுத்தவுடன் அம்மரத்தில்
பாங்கான கனிகள்
அடுத்தடுத்தே உள்ளவற்றை
அதிசயித்துப் பார்த்தான். (2)

" ஒருகுறைதான் இம்மரத்தில்
உளதாகும் ; அதுவும்
சிறுபழங்கள் பெருங்கிளையில்
சேர இருப் பதுவே. (3)

" மிகப்பெரிய மரத்தினுக்கு
மிகச்சிறிய கனிகள்
தொகைப்படவே படைத்த ஈசன்
சொற்ப அறிவுடையோன் !" (4)

என்றுமிக இகழ்ந்துரைத்தே
இருக்கின்ற சமயம்
அன்றுமிகப் பழுத்தகனி
அவன் தலையில் விழவே ; (5)

நோவடைந்தே, " ஐயோ ! நான்
நுட்பஅறி வின்றி
ஆவதுணர் ஈசனையே
அதிகம் இகழ்ந் தேனே. (6)

" சிறுபழத்தால் இவ்வளவு
வலியுளதேல், சிறியேன்
பெரும்பழமா யிருப்பின் அதன்
வலியும் பொறுப்பேனே !" (7)

என்றுமிக அன்புடனே
ஈசனைத் துதித்தே
சென்றுதான் குறித்தஇடம்
செவ்விதாகச் சேர்ந்தான். (8)

—வித்துவான் ம. பெரியசாமிப் பிள்ளை

| | | | |
|---|---|---|---|
| குறை | களைப்பு | அதிசயித்து | அடுத்தடுத்து |
| சேர | சொற்பம் | படைத்தல் | வழிப்போக்கன் |
| நோவு | உளதேல் | செவ்விதாக | தொகைப்பட |
| ஈசன் | காத்திடல் | இளங்காற்று | |

### வினாக்கள்

1. வழிப்போக்கன் எதற்காக ஆலமரத்தின் கீழே தங்கினான் ?
2. அவன் படுத்திருக்கும்போது என்ன நேர்ந்தது ?
3. வழிப்போக்கன் தான் கடவுளை இகழ்ந்தது குற்றமென்று எவ்வாறு உணர்ந்தான் ?
4. யாவையும் படைத்தவன் யார் ? அவன் எவ்வாறு அவற்றைக் காப்பாற்றுகிறான் ?

## 26. கப்பலோட்டிய தமிழன்

'கப்பலோட்டிய தமிழன்' என்று சொல்லும்போதே நம் உள்ளத்தில் வீரவுணர்ச்சி தோன்றுகிறது. அவ் வுணர்ச்சிக்குக் காரணமானவர் யார்? அவரே வீர சிதம்பரனார் என்னும் வ. உ. சிதம்பரம் பிள்ளை ஆவர்.

இவர் காலத்துக்கு முன்பெல்லாம் ஆங்கிலேயர்களே நம் நாட்டில் கப்பற் போக்குவரவுத் தொழிலை நடத்திப் பொருள் ஈட்டினர். இதைக் கண்ட சிதம்பரனார்க்கு நமது பழந்தமிழர் திரைகடலோடியும் திரவியம் தேடிய செய்தி நினைவுக்கு வந்தது. அதனால் தாமும் ஒரு கப்பல் வியா பாரக் குழுவை உண்டாக்க எண்ணித் தம் நண்பர்கள் உதவியால் 'சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி' என்ற பெயருடன் ஒரு குழுவை உண்டாக்கினர்.

பின்பு தாமே அக்குழுவின் அமைச்சராகிக் குழுவுக் குச் சொந்தமாக ஒரு கப்பலை விலைக்கு வாங்கி, கப்பற் போக்குவரத்து வியாபாரத்தைச் செவ்வையாக நடத்தி னார். இதற்கு ஆங்கிலக் கம்பெனிகள் இடையூறுகள் செய்தன. அதற்கெல்லாம் அஞ்சாத நமது வீரர், தொடங்கிய செயலை விடாது நடத்திவந்தனர். எனினும், நாட்டுப்பற்று மிகுந்த இவர், விடுதலைப் போரில் தீவிரமாக ஈடுபட்டதாலும், அரசாங்கத்தாரின் அடக்கு முறையா லும் கப்பற்குழுவின் இயக்கத்தைக் கைவிடலாயிற்று.

வீரத் தமிழராகிய சிதம்பரம் பிள்ளை அவர்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் தூத்துக்குடிக்கு அருகில் ஒட்டப்பிடாரம் என்ற ஊரில் உலகநாதப் பிள்ளைக்கும், பிரமாயி அம்மையாருக்கும் குமாரராக 1872ஆம் ஆண் டில் பிறந்தார். இளமையிலேயே கல்வி பயிலத் தொடங் கிய இவர் மெட்ரிகுலேஷன் பரீட்சையிலும், சட்டப்படிப்

பிலும் தேறி வழக்கறிஞர் தொழிலில் ஈடுபடலானார். இவர் அவ்வலுவலை நேர்மையாயும், திறமையாயும் செய்து நல்ல புகழ் படைத்தார். சிதம்பரனாருக்குத் தம் தாய் மொழியான தமிழில் மிக்க பற்றுண்டு. தமது ஓய்வு நேரங்களிலெல்லாம் தமிழைப் பயின்று புலமையடைந் தார். பிள்ளையவர்கள் திருக்குறளில் மிக்க ஈடுபாடு உடையவர்; திருக்குறளில் அறத்துப்பாலை மணக்குடவர் உரையுடன் பதிப்பித்துள்ளார்.

திலகரும் காந்தியடிகளும் நாட்டு விடுதலைப் போரில் தலைமை தாங்கி நடத்திய காலங்களில் சிதம்பரனார் அவ் வியக்கத்தில் முழுமனத்துடன் ஈடுபட்டார். தமிழ் நாட்டில் பல கூட்டங்களில் பேசி நாட்டுப்பற்றை மக்க ளின் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதியச் செய்தார்.

விடுதலைப் போரில் இவர் தீவிரமாக ஈடுபட்டதனால் அரசியலார் இவரைச் சிறைசெய்தனர். சிறையில் இவர் கடுமையாக நடத்தப்பட்டார். ஆயினும் இவருடைய நாட்டுப்பற்று எவ்வகைத் துன்பங்களையும் பொறுத்துக் கொள்ளும் ஆற்றலை அளித்தது. இவர் சிறையிலிருந்த காலத்தில் சிறந்த தமிழ் நூல்களை ஆராய்ந்து வந்தமை இவருக்குள்ள தாய்மொழிப் பற்றை நன்கு காட்டும். இத்தகைய உண்மைத் தொண்டர் நாட்டுக்கும், மொழிக் கும் பணிசெய்த தீரர், கப்பலோட்டிய தமிழராகிய வீர சிதம்பரனார் 1936ஆம் ஆண்டில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

நம் நாடு விடுதலை பெற்றுத் தன்னாட்சி அடைந் துள்ளது. குடியரசு அரசாங்கம், முன்னைய விடுதலைப் போரில் ஈடுபட்ட சிறந்த தொண்டர்களின் நினைவுக் குறி யாகச் சில ஏற்பாடுகளைச் செய்துவருகின்றது. அம் முறையில், நம் சென்னை அரசினர், வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் பிறந்த ஊரில் அவர் வாழ்ந்த இல்லத்தை

விலைக்கு வாங்கியுள்ளனர். அவ்வீட்டைப் பிள்ளையவர் களது நினைவுச் சின்னமாக ஆக்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் விரைவில் செய்ய வேண்டுமென்பது நமது அரசியலார் எண்ணம்.

| | | |
|---|---|---|
| வீரவுணர்ச்சி | இடையூறு | பசுமரத்தாணி |
| பொருள் ஈட்டினர் | அடக்குமுறை | ஆற்றல் |
| திரைகடல் | கைவிடல் | வந்தமை |
| திரவியம் | வழக்கறிஞர் | தன்னாட்சி |
| செவ்வையாக | ஈடுபடல் | நினைவுச் சின்னம் |

## வினாக்கள்

1. சிதம்பரனாரின், பிறப்பு, கல்வி பற்றி ஒரு பத்தி எழுது.
2. சிதம்பரனார் கப்பல் வியாபாரக் குழு ஒன்றை ஏன் நிலை நாட்டினார்?
3. சிதம்பரனார் ஏன் சிறைவாசம் செய்ய நேர்ந்தது?
4. சிதம்பரனாரின் தமிழ்ப்பற்று எவ்வாறு வெளிப்பட்டது?

## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களிலுள்ள கருத்து முடியும் வினைச் சொற்களை எடுத்துக் கூறு:

(1) புலிகள் காட்டில் வாழ்கின்றன.
(2) குருவி கூடு கட்டுகிறது.
(3) மனிதர்கள் வேலை செய்கிறார்கள்.
(4) கந்தன் காற்றாடி விடுகிறான்.
(5) நாங்கள் கோயிலுக்குப் போகிறோம்.
(6) நான் பாடம் படிக்கிறேன்.
(7) தங்கை விளையாடுகிறாள்.



## 27. பேசிய குகை

வெகு காலத்திற்குமுன் ஒரு காட்டில் சிங்கம் ஒன்று வசித்தது. அதற்குக் கிழப்பருவம் வந்தபின், பல இடங்களுக்குச் சென்று பிராணிகளைக் கொன்று தின்ன அதனால் இயலவில்லை.

ஒருநாள் இந்தச் சிங்கம் பசியோடு ஒரு மலைக்குப் பக்கத்தில் போய்க்கொண்டிருந்தது. அம்மலையின் ஓர் இடத்தில் இருட்டான குகை ஒன்று இருந்தது. சிங்கம் அதைப் பார்த்து, "ஆ! எனக்கு ஒரு வழி கிடைத்து விட்டது! இந்தக் குகைக்குள்ளே போய்க் காத்துக்கொண் டிருப்பேன். ஏதேனும் பிராணிகள் இந்தக் குகைக் குள்ளே வரும். அவற்றைப் பிடித்துத் தின்று நான் பசியைப் போக்கிக் கொள்வேன். இனிமேல் எந்தப் பிராணி

யும் என்னிடமிருந்து தப்ப முடியாது,'' என்று சொல்லிக் கொண்டது; குகைக்குள்ளே போய் ஒளிந்து கொண்டது.

அந்தக் குகையில் ஒரு நரி வசித்து வந்தது. வெளியே போயிருந்த நரி சிறிது நேரத்தில் திரும்பி வந்தது. குகை வாசலில் வந்ததும் ஒரு புதிய மணம் வீசுவதை அது உணர்ந்தது. "இங்கே ஒரு புதிய மணம் தெரிகிறது. குகைக்குள்ளே யாரேனும் சென்றிருக்கலாம். கிழட்டுச் சிங்கமா, முரட்டுப் புலியா? எப்படி இதைக் கண்டுபிடிக்கலாம்?'' என்று அந்த நரி சிறிது நேரம் திகைத்தது. பிறகு, "சரியான யோசனை! இதோ கண்டுபிடிப்பேன்,'' என்று சொல்லிக் கொண்டு, அது குகையைப் பார்த்து, "குகை நண்பனே! நீ எப்படி இருக்கிறாய்? நலமா?'' என்று கேட்டது. ஆனால் குகை பதில் ஒன்றும் சொல்லவில்லை. நரி மறுபடியும், "ஆ! வியப்பாயிருக்கிறதே! தினமும் என்னுடன் பேசும் நீ இன்று என்னுடன் பேசவில்லையே? உனக்கு உடம்பு சரியில்லையோ! அப்படியானால் நான் உள்ளே வந்து உன்னைத் தொந்தரவு செய்யமாட்டேன்,'' என்று சொல்லிக்கொண்டே திரும்பியது.

இப்போது உள்ளேயிருந்த சிங்கம், "ஒருவேளை இந்தக் குகை தினமும் நரியுடன் பேசுகிறது போலும். இன்று நான் வந்ததால் குகை பயந்துபோய்ப் பேசவில்லை. ஆகவே, குகை பேசுவதுபோல், நான் பேசுவேன். அது திரும்பி உள்ளே வரும்,'' என்று நினைத்தது.

உடனே சிங்கம், "நண்பனே நான் நலமாயிருக்கிறேன். நீ வரும்போது நான் தூங்கிக்கொண்டிருந்தேன். தயவு செய்து உள்ளே வருகிறாயா?'' என்று கேட்டது.

சிங்கத்தின் குரலைக் கேட்ட நரி தனக்குள் சிரித்துக் கொண்டது. "நீ கிழட்டுச் சிங்கம் என்று தெரிந்து

கொண்டேன். சரி! நான் போய் வருகிறேன்,'' என்று சொல்லிக்கொண்டே நரி ஓடிவிட்டது.

ஏமாந்த சிங்கம் ஒன்றும் புரியாமல் விழித்தது.

| | | | |
|---|---|---|---|
| கிழப்பருவம் | தப்ப முடியாது | யோசனை | புரியாமல் |
| இயலவில்லை | மணம் | தொந்தரவு | விழித்தது |
| குகை | முரட்டு | ஒருவேளை | நலம் |
| போக்கிக்கொள்ள | திகைத்தது | தயவுசெய்து | |

## வினாக்கள்

1. கிழட்டுச் சிங்கம் பிராணிகளைப் பிடிக்க என்ன தந்திரம் செய்தது?
2. குகையருகே வந்த நரி ஏன் உள்ளே செல்லவில்லை?
3. குகையுடன் பேசுவதுபோல் நரி என்ன சொல்லியது?
4. குகையினுள் சிங்கம் இருந்தது எப்படி வெளிப்பட்டது?

## பயிற்சி

பின்வரும் வாக்கியங்களில் பெயர்ச்சொற்கள் எவையெவை? வினைச்சொற்கள் எவையெவை?

(1) சந்தைக்குச் சென்று காய்கறி வாங்கி வா.

(2) பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறும்.

(3) பூக்கள் தொடுக்கவும், மாலைகள் கட்டவும் வாழை நாரை உபயோகிக்கலாம்.

(4) சணல் நாரை உரித்து இழைகளாக எடுத்துச் சாக்கு நெய்கிறார்கள்.

(5) சோம்பல் இல்லாமல் தொழில் செய்து பிழை.

## 28. குழந்தையின் தோத்திரம்

உள்ளத்தில் உள்ள பரமா—எனக்
குன்னருள் வெள்ளத்தை யீவாய் !
கள்ள மில்லாத மனத்தால்—உன்னைக்
காலையு மாலையு நினைப்பேன் !
கல்வி யறிவொளி யீவாய்—நற்
கலையிற் புலமை யளிப்பாய் !
நல்ல வொழுக்கம் அருள்வாய்—தாய்
நாட்டின் மணிப் பிள்ளை யாவேன் !
துச்ச நினைவை யொழிப்பாய்—என்றுந்
தூய நினைப்பை வளர்ப்பாய்
அச்சப் பிசாசைத் துரத்தி—வீரர்
ஆண்மையும் ஆற்றலுந் தாராய் !
தாயும்தகப்பனும் நீயே—கல்வி
தந்துத வுங்குரு நீயே !
நோய்தவிர் வைத்தியன் நீயே—சுற்றி
நோக்கும் உலகெல்லாம் நீயே !

—சுவாமி சுத்தானந்த பாரதியார்

| | | | |
|---|---|---|---|
| பரமன் | ஈவாய் | மணிப்பிள்ளை | அச்சப்பிசாசு |
| அருள் | கள்ளம் | துச்சம் | நோய் தவிர் |
| வைத்தியன் | | | |

### வினாக்கள்

1. கடவுள் என்ன என்ன அளிப்பார் ?
2. கடவுள் எத்தகையவர் ?



## 29. குருடரும் முடவரும்

சோழ நாட்டில் ஆமிலந்துறை என்ற ஊரில் இரு புலவர்கள் வாழ்ந்துவந்தனர். அவர்கள் அத்தான், அம்மான்சேய் என்னும் உறவுமுறை உடையவர்கள். அவர்களுள் ஒருவர் குருடர்; மற்றவர் முடவர். இந்த அங்கவீனம் பற்றியும், உறவுமுறை பற்றியும் ஒருவரையொருவர் பரிகசித்து நகையாடுவர். ஆயினும் அவர்கள் ஒன்றுபட்டு வாழும் தன்மையுடையவர்கள். வெளியிற் போகும்போது இருவரும் சேர்ந்தே போவர். அப்பொழுது குருடர் தோளில் முடவர் ஏறி வழி காட்டுவார்; குருடர் முடவரைச் சுமந்து செல்வார்.

அவர்களில் குருடர் வயதில் சிறிது மூத்தவர்; முடவர் சற்று இளையவர். ஆயினும் அறிவிலும் கடவுள்பால் கொண்ட அன்பிலும் ஒத்த பான்மையுடையவர்கள். மூத்தவராகிய குருடருக்கு முதுசூரியர் எனவும், இளையவராகிய முடவருக்கு இளஞ்சூரியர் எனவும் பெயர் வழங்கி

மக்கள் அழைக்கலாயினர். சூரியனொளிபோல் அவர் களுக்கு அறிவுமிக்கிருந்தமை கவனிக்கத் தக்கது.

அவர்கள் கல்விகற்றுச் சிறந்த புலமை பெற்றனர். ஆழ்ந்த கருத்தமைந்த கவிபாடுதலிலும் வல்லவராயினர். ஆனால் கவிபாடும்பொழுது, ஒருவர் ஒரு கவியில் பாதியும் மற்றவர் இன்னொரு பாதியுமாகச் சேர்ந்தே பாடுவர். இவ்வாறாக, அவர்கள் வாழ்க்கை ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாத வகையில் அமைந்திருந்தமையால் அவர்களை 'இரட்டைப் புலவர்' எனவும் அறிஞர்கள் வழங்க லாயினர்.

ஒருகால், தலயாத்திரை செய்துவருகையில் அவர்கள் சிதம்பரம் சென்றனர். அங்கு ஒரு வீதியில் செல்வன் ஒருவன் சிலர் தன்னைச் சூழ்ந்துவர, அவர்கள் எதிரே வந்தான். வந்தவன் தன் எதிரே காண்பவர் இரட்டைப் புலவர் என அறிந்தும், கல்வி யறிவற்ற மூடனாகையால், புலவர்களை உபசரியாது, ஒதுங்கிச் சென்றான். அதனை அறிந்த முடவர்,

"மூடர்முனே கல்வி மொழிந்தால் அறிவரோ
ஆடெடுத்த தென்புலியூர் அம்பலவா—"

எனப் பாடி நிறுத்தினர். உடனே, குருடர்,

—"ஆடகப் பொன்
செந்திருவைப் போலணங்கைச் சிங்காரித் தென்னபயன்
அந்தகனே நாயகனா னால்,"

எனப் பாடிக் கவியை முடித்தனர்.

மற்றொருகால் மதுரைக்குச் சென்று, திருக்கோயிலில் உள்ள பொற்றாமரைக் குளத்தில் நீராடச் சென்றனர். முடவர் படியில் உட்கார்ந்துகொண்டார். குருடர் நீரில் இறங்கி ஆடையைத் தப்பினர். பின் அதனை அலசும் பொழுது ஆடை குருடர் கையினின்று நழுவிச் சென்றது. அப்பொழுது முடவர், பரிகாசமாகக் கைகொட்டி,

" அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினல் நம்மையது தப்பாதோ,"

என்று பாட, குருடர்,

—" அப்படியே

" ஆனலும் கந்தை அதிலுமோர் ஆயிரங்கண்
போனல் துயர்போச்சுப் போ,"

எனப் பாட்டை முடித்தனர். உடனே முடவர்,

" கண்ணு யிரமுடைய கந்தையே ஆனலும்
தண்ணூர் குளிரையுடன் தாங்காதோ ?"

எனப் பாடக் குருடர்,

—" எண்ணுதீர்

இக்கலிங்கம் போனலென் ஏகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்கம் உண்டே துணை,"

எனப் பாடிப் பாட்டை முடித்தார்.

இங்ஙனம் இரட்டைப் புலவர்கள், உறுப்புக்குறை உடையவர்களாயினும் அறிவுக்குறை இல்லாதவர்களாய் நகைச்சுவை தோன்றவும் அதே சமயத்தில் இறைவ னிடத்தும் தாய்மொழியினிடத்தும் பற்று மிகுமாறும் தொண்டு செய்தமை அறிந்து இன்புறத் தக்கதாம். மேலும், உறவினர் தாம் கல்விச் செல்வம் பெற்ற பொழுதும் ஒருவரையொருவர் தழுவி நல்வாழ்க்கை வாழ வேண்டும் என்பதும் இவ்விரட்டையர் வரலாற்ருல் நன்கு விளங்கும்.

| | | |
|---|---|---|
| அம்மான் சேய் | வல்லவர் | தப்பினல் |
| உறவு முறை | தலயாத்திரை | துயர் |
| அங்கவீனம் | ஆடெடுத்த | கலிங்கம் |
| பரிகசித்து | ஆடகப்பொன் | உறுப்புக்குறை |
| நகையாடுவர் | அணங்கு | தொண்டு |
| பான்மை | அந்தகன் | இன்புறத்தக்கது |

## வினுக்கள்

1. இரட்டையர் யாத்திரை செல்லும்பொழுது எவ்வாறு செல்வது வழக்கம்?

2. இரட்டையரை மதியாத செல்வனைப் பற்றி அவர்கள் பாடிய பாட்டின் கருத்து என்ன?

3. பொற்ருமரைக் குளத்தில் குளிக்கும்பொழுது என்ன நிகழ்ந்தது?

4. இரட்டையர் வாழ்விலிருந்து நாம் தெரிந்துகொள்வது யாது?

## பயிற்சி

1. வந்தேன், வருகிறேன், வருவேன்—இம்மூன்று வினை முற்றுக்களையும் கவனி. வந்தேன் என்னும் வினைமுற்று தொழில் முன்னமே நடந்துவிட்டதைக் குறிக்கிறது அல்லவா? வருகிறேன் என்னும் வினைமுற்று, தொழில் இப்போது நடந்து கொண்டிருப் பதைக் குறிக்கிறது. வருவேன் என்னும் வினைமுற்று, தொழில் இனி நடக்கப்போவதைக் குறிக்கும். தொழில் நடந்துவிட்டதைக் குறிக்கும் காலம் இறந்தகாலம். தொழில் நடந்து கொண்டிருப் பதைக் குறிக்கும் காலம் நிகழ்காலம். தொழில் நடக்கப் போவ தைக் குறிக்கும் காலம் எதிர்காலம். ஆகையால் வந்தேன், வருகிறேன், வருவேன் என்பதை முறையே இறந்தகால வினை முற்று, நிகழ்கால வினைமுற்று, எதிர்கால வினைமுற்று என்று சொல்லப்படும். எதிர்காலத்தை வருங்காலம் என்றும் சொல்ல லாம்.

2. பின்வரும் வினைமுற்றுக்களுக்குக் காலம் கூறுக:

செய்தான், செய்தாய், செய்யும், உண்ணுகிறேன், ஓடு கிறது, பார்க்கிறேன், கொடுப்பார், கொடுத்தன, கொடுக்கின் றன, உழுகிருர்கள்.

3 பின்வரும் ஒவ்வொரு வாக்கியத்தையும் இரண்டிரண்டு வாக்கியங்களாகப் பிரித்து எழுது:

(1) இங்கு யாவும் ஒன்றென்று கொண்டால், இன்பங்கள் யாவும் பெருகும்.

(2) மரத்தினை நட்டவன் தண்ணீர் நன்கு வார்த்து அதையோங்கிடச் செய்வான்.



## 30. ஜேம்ஸ் வாட்

மாணவர்களே! நீங்கள் புகைவண்டித் தொடரில் பயணம் செய்திருக்கிறீர்களல்லவா! வண்டித்தொடரை இழுத்துச் செல்வது ஒரு நீராவி எஞ்சின் ஆகும். நீராவியால் இயங்கும் எஞ்சினை வண்டித்தொடரில் இணைத்து இழுக்கும்படி செய்தவர் ஸ்டீவன்ஸன் என்பவர். ஆனால் நீராவி எஞ்சினை முதலில் நன்கு அமைத்தவர் ஜேம்ஸ் வாட் என்பவராவார்.

ஜேம்ஸ் வாட் இங்கிலாந்தில் கிரீனக் என்ற ஊரில் கி. பி. 1736இல் பிறந்தார். இளமையில் இவரது உடல் நிலை கெட்டு இருந்ததால் பள்ளிப் படிப்பு இவருக்கு ஒரு பயனும் தரவில்லை. கணித பாடத்தில் இவருக்கு மிக்க ஆர்வம் இருந்ததால், வீட்டிலேயே படித்துப் போதிய கல்வியறிவு அடைந்தார்.

பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த நியூகோமன் என்ற ஒரு விஞ்ஞானி நீராவியின் திறனைப் பயன்படுத்தி ஓர் எஞ்சினை அமைத்தார். இதில் பலவிதக் குறைபாடுகள் இருந்தன.

இதைப்பற்றி ஜேம்ஸ் வாட் அறிந்திருந்தார். நியூ கோமன் கண்டுபிடித்த நீராவி எஞ்சினின் குறைகளை யெல்லாம் போக்கிச் சிறந்த எஞ்சின் ஒன்றைக் கண்டு பிடிக்க ஆவல்கொண்டு ஆராய்ந்து வந்தார்.

இவர் பத்தொன்பதாம் வயதில் இலண்டனுக்குப் போய் கணிதத் துறைக் கருவிகள், கடல்துறைக் கருவிகள் ஆகியவை அமைக்கும் தொழிலைக் கற்றார். பிறகு ஒரு பல்கலைக் கழகத்தில் விஞ்ஞான ஆராய்ச்சிக் கருவிகளைப் பழுதுபார்க்கும் பணி இவரிடம் ஒப்படைக்கப்பட்டது.

ஆராய்ச்சிக் கூடத்தில் முன்சொன்ன நியூகோமன் நீராவி எஞ்சின் ஒன்றும் இருந்தது. இது வேலை செய்யும் முறையைக் கூர்ந்து பார்த்தார், ஜேம்ஸ் வாட். அதி லுள்ள குறைபாடு அவருக்குப் புலப்பட்டது. அதை நீக்கி, ஒரு புதிய எஞ்சினை அமைத்தார். அது நன்றாக வேலை செய்தது.

ஜேம்ஸ் வாட் இதைப்போல் பல எஞ்சின்களைச் செய்து விற்றார்; அவருக்கு நல்ல லாபம் கிடைத்தது. பலர் இந்த எஞ்சின்களை வாங்கிச் சுரங்கங்களில் ஊறும் தண்ணீரை இறைப்பதற்குப் பயன்படுத்தினார்கள்.

வாட் இதோடு நிற்கவில்லை. மேலும் ஆராய்ந்து, தம் எஞ்சினைச் சீர்திருத்த ஆவல்கொண்டார். அதன் பயனாக நீராவியின் திறனால் முன்னும் பின்னும் நகரும் இரும்புத்தண்டை ஒரு சக்கரத்துடன் இணைத்து அதைச் சுழலச் செய்தார். இதனால் பல தொழில்களில் நீராவி எஞ்சின் பயன்படலாயிற்று. மாவரைத்தல், நூல் நூற்றல்,

அச்சு எந்திரங்களை ஓட்டுதல் ஆகியவற்றில் நீராவி எஞ்சின்கள் பெரிதும் தேவைப்பட்டன.

வாட் கண்டுபிடித்த இந்த எஞ்சினை அடிப்படை யாகக்கொண்டு ஸ்டீவன்ஸன் என்பவர் வண்டித்தொடரை இழுத்துப்போகும் எஞ்சினை அமைத்தார். இவர் அமைத்த முதல் எஞ்சினுக்கு 'ராக்கட்' என்று பெயர். தண்டுடன் சக்கரங்களை வரிசையாக இணைத்து, நீரா வியை ஒரு பெட்டியின்மூலம் முன்னும் பின்னும் செலுத் தித் தண்டை இயக்கவேண்டும். அப்போது சக்கரங் களும் சுழன்று வண்டித்தொடர் இருப்புப்பாதையில் ஓடுகிறது.

ஜேம்ஸ் வாட் கண்டுபிடித்த இந்த நீராவி எஞ்சினின் உதவியால் பல தொழில்கள் பெருகின; இருப்புப்பாதை கள் உண்டாயின; கடலில் கப்பல்களையும் இதனால் இயக்கினார்கள்.

ஜேம்ஸ் வாட் மனைவி மக்களுடன் அமைதியாக வாழ்ந்தார். தம் எண்பத்து நான்காம் வயதில் அவர் இவ்வுலகைவிட்டு மறைந்தார். வாட் இந்த உலகிற்குச் செய்த பெரிய சேவைக்காக இங்கிலாந்தில் இவரது உருவச் சிலையை நினைவுச் சின்னமாக அமைத்துள்ளார்கள்.

| | | | |
|---|---|---|---|
| எஞ்சின் | குறைபாடு | பெருகின | சேவை |
| திறன் | புலப்பட்டது | இயக்கினார்கள் | உருவச்சிலை |
| பழுதுபார் | தேவைப்பட்டன | | |

## வினாக்கள்

1. ஜேம்ஸ் வாட் காலத்திற்குமுன் நீராவி எஞ்சினை அமைத்தவர் யார்?

2. ஜேம்ஸ் வாட் நீராவி எஞ்சினை எவ்வாறெல்லாம் சீர் திருத்தினார்?

3. ஜேம்ஸ் வாட்டின் நீராவி எஞ்சின் எந்த வேலைகளுக்குப் பயன்பட்டது ?

4. ஸ்டீவன்ஸன் செய்தது என்ன ?

## பயிற்சி

1. 'நான் வந்தேன்' என்பதில் வந்தேன் என்பது வினை முற்று. வருதலாகிய தொழிலைச் செய்தது 'நான்'. ஆதலால் நான் என்பது கருத்தா ஆகும். (கருத்தா=வினையைச் செய்பவர்.) ஒரு வாக்கியத்திலுள்ள கருத்தாவிற்கு எழுவாய் என்று பெயர் ; கருத்தா செய்யும் தொழிலுக்குப் பயனிலை என்று பெயர்.

2. பூனை எலியைப் பிடிக்கிறது—இவ்வாக்கியத்தில் பூனை—எழுவாய். பிடிக்கிறது—பயனிலை. பூனை எதைப் பிடிக்கிறது என்று கேள்வி கேட்டால் எலியை என்று விடை வருகிறது அல்லவா ? இது செயப்படு பொருள். செயப்படு பொருளானது எழுவாய் செய்யும் தொழிலின் பயனை அடையும் பொருளாம்.

வாக்கியத்திற்கு எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் என்பன உறுப்புக்கள் ஆகும்.

3. பின்வரும் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களைக் குறிப்பிடுக.

அம்மா சோறு சமைக்கிருள்.
பறவை முட்டை இடும்.
பறவை ஆகாயத்தில் பறக்கும்.
எப்போதும் உண்மை பேசு.
நான் பள்ளிக்கூடம் போகிறேன்.



## 31. விக்கிரமாதித்தனின் அரியணை

முன் காலத்தில் நம் நாட்டை ஆண்ட சிறந்த அரசர்களில் விக்கிரமாதித்தனும் ஒருவர். அவரைப் பற்றிய சில கதைகளை நீங்கள் கேள்வியுற்றிருப்பீர்கள். அவர் அமர்ந்து நீதி வழங்கிய அரியணையைப் பற்றியும் ஒரு கதை வழங்குகிறது.

விக்கிரமாதித்தன் காலத்திற்குப் பிறகு பல நூற்றுண்டுகள் கழிந்துவிட்டன. அவரது அரண்மனை இருந்த இடமெல்லாம் மண்மூடி மேடிட்டுவிட்டது. அந்த இடத்தில் மரஞ்செடிகளும் புல்லும் வளர்ந்து ஒரு காடே தோன்றிவிட்டது.

அருகேயிருந்த கிராமத்துச் சிறுர், அங்கே மாடுகளை ஓட்டி வந்து மேய்ப்பது வழக்கம். ஒரு நாள்

அவர்கள் ஒரு மண்மேட்டினருகே விளையாடிக்கொண் டிருந்தார்கள். அப்பொழுது இரு சிறுவர்கள் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டார்கள். மூன்றும் சிறுவன் ஒருவன் அவர்களுடைய வழக்கைத் தான் விசாரணை செய்யப்போவதாகக் கூறிவிட்டு, அந்த மண் மேட்டின் மீது அமர்ந்துகொண்டான். சண்டையிட்ட சிறுவர்கள் அவன் முன் நின்றுகொண்டு தங்கள் வழக்கை எடுத் துரைத்தார்கள். நீதிபதியாக அமர்ந்த சிறுவன், உண்மை யான குற்றவாளியைச் சுட்டிக்காட்டி, நியாயமான தீர்ப்புக் கூறினான். சிறுவர்களெல்லாம் இதைப் பார்த்து வியந்தார்கள். அந்த மண்மேட்டில் யார் உட்கார்ந்து தீர்ப்புக் கூறினாலும், அது நியாயமாகவே இருந்தது. எனவே, சிறுவர்கள் நாள்தோறும் 'நீதிபதி விளையாட்டு' விளையாடுவது வழக்கமாகிவிட்டது.

அப்பொழுது அந்த நாட்டுக்கு அரசனாயிருந்த போசன், இந்த மண்மேட்டின் சிறப்பைப் பற்றிக் கேள்வி யுற்றான். தன் மந்திரிகளிடம் அதைப்பற்றிக் கேட்டான். வயதான மந்திரி ஒருவர், "அரசே! அந்த மண்மேடும் காடும் இருக்கும் இடத்தில்தான் முன்னொரு காலத்தில் விக்கிரமாதித்தனது அரண்மனை இருந்ததாகக் கேள்வி யுற்றிருக்கிறேன். அங்கே தோண்டிப் பார்த்தால், ஏதேனும் புதைபொருள்கள் இருக்கலாம்," என்றார்.

போசனுடைய உத்தரவுப்படி, வேலையாட்கள் அந்த மண்மேட்டைத் தோண்டினார்கள். இருபது அடி ஆழம் தோண்டிய பிறகு தங்கமயமான ஓர் அரியணை காணப் பட்டது. அதை வெளிக் கொணர்ந்து சுத்தப்படுத்தி, போசனுடைய அரண்மனைக்கு எடுத்துச் சென்றார்கள். இந்தச் சிங்காதனத்தின் தெய்விக சக்தியினால்தான், சிறுவர்கள் நியாயமான தீர்ப்புக் கூறினார்கள் என்பதை எல்லோரும் தெரிந்துகொண்டார்கள். அந்தச் சிங்கா

தனத்தில் பல படிகள் இருந்தன. ஒவ்வொரு படியிலும் இரண்டு தங்கப் பதுமைகள் இருந்தன.

ஒரு நல்ல நாளில், போசன் அந்த அரியணையில் ஏறி அமர்வதற்காக அதன்முன் வந்தான். அவன் முதல் படியில் காலை வைக்கும்பொழுது, அதிலிருந்த பதுமை ஒன்று திடீரென உயிர்பெற்று, "அரசே, விக்கிரமாதித்தனைப் போன்ற தகுதியுள்ளவர்களே இதில் உட்கார்ந்து ஆட்சி புரியலாம். இதில் அமர உங்களுக்குத் தகுதி உண்டா?" என்று கேட்டது.

போசன், "விக்கிரமாதித்தனுடைய சிறப்பைப் பற்றிக் கூறினால் கேட்க விரும்புகிறேன்," என்றான்.

உடனே அப்பதுமை விக்கிரமாதித்தனுடைய வரலாற்றில் ஒரு நிகழ்ச்சியை எடுத்துரைத்தது. இவ்வாறே ஒவ்வொரு படியாக சிம்மாதனத்தின்மேல் ஏறும்பொழுது, பதுமைகள் அவனுக்கு விக்கிரமாதித்தனுடைய வரலாற்று நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறின. முடிவில் போசன், அந்த அரியணையில் அமரும் தகுதி தனக்கு இல்லை என்பதை ஒப்புக்கொண்டான்.

பிறகு போசனும் மந்திரிகளும் பிரபுக்களும் அந்த அரியணைக்கு எதிரே நின்று கைகூப்பித் தொழுதார்கள். அப்பொழுது அதன் பக்கங்களிலிருந்த இறக்கைகள் விரிந்தன; அது ஒரு விமானம் போல் மேலே கிளம்பிப் பறந்து, சிறிது நேரத்தில் மறைந்துவிட்டது.

அதைப் பார்த்து நின்ற யாவரும் வியப்புக் கடலில் மூழ்கினார்கள்; விக்கிரமாதித்தனின் பெருமையையும், அரியணையின் தெய்விகத் தன்மையையும் வாயாரப் புகழ்ந்தார்கள்.

| அரியணை | தங்கமயம் | தகுதியுள்ளவர் |
|---|---|---|
| மேடிட்டு | சிங்காதனம் | வரலாறு |
| சிறுர் | தெய்விக | கைகூப்பி |
| சுட்டிக்காட்டு | பதுமை | தொழுதார்கள் |
| புதைபொருள் | அமர்வதற்கு | வாயார |

### விஞக்கள்

1. சிறுவர்கள் எங்கே நீதிபதி விளையாட்டு விளையாடினுர்கள்? அதன் விசேஷம் என்ன?

2. போசன், மண்மேட்டைத் தோண்டியபொழுது என்ன கிடைத்தது?

3. விக்கிரமாதித்தனுடைய சிம்மாதனம் எவ்வாறு அமைந்திருந்தது?

4. போசன் அரியணையின்மீது ஏறத் தொடங்கியதும் என்ன நிகழ்ந்தது?

5. முடிவில் அரியணை எவ்வாறு மறைந்தது?

### பயிற்சி

1. (1) நாய் தெருவில் அலைந்து திரிகிறது. குறைக்கிற நாய் கடிக்காது—இவ்வாக்கியங்களில் அலைந்து, குரைக்கிற என்பன வினைச் சொற்களே. ஆனல் இவற்றில் கருத்து முடியவில்லை. இவ்விதம் கருத்து முடியாத வினைச் சொற்கள் எச்சவினை எனப்படும்.

(2) அலைந்து என்ற எச்சவினை, திரிகிறது என்ற வினைச் சொல்லைக் கொண்டு முடிகிறது. குரைக்கிற என்ற எச்சவினை நாய் என்ற பெயர்ச்சொல்லைக் கொண்டு முடிகிறது.

(3) வினைச் சொல்லைக் கொண்டு முடியும் எச்சவினை வினையெச்சம் எனப்படும்.

பெயர்ச் சொல்லைக் கொண்டு முடியும் எச்சவினை பெயரெச்சம் எனப்படும்.

2. பின்வரும் வாக்கியங்களிலுள்ள பெயரெச்ச, வினையெச்சங்களை எடுத்துக் கூறு.

(1) காலையில் குளிர்ந்த நீரில் குளிக்கவேண்டும்.

(2) ஒருவருக்குத் தகுந்த உணவு எது என்பதை மற்றவர் சொல்ல முடியாது.

(3) மருத்துவரை நாடாமலிருந்தால் நோயும் மறையும்.

## 32. இளம் புலவனைக் காத்த பெரும் புலவர்
(நாடகம்)

உறுப்பினர் :

நெடுங்கிள்ளி — உறையூரில் ஆண்ட சோழ அரசன்
கோவூர்கிழார் — பெரும்புலவர்
இளந்தத்தன் — இளம் புலவன்
ஊர்க் காவலர், வாயில் காவலர், சேனாதிபதி, மந்திரிகள்.
இடம் : உறையூர் காலம் : முற்பகல்

### காட்சி 1

[அரண்மனை வாயிலில் ஊர்க் காவலர் இருவர் இளந்தத்தனைப் பார்த்துப் பேசிக் கொள்கின்றனர்.]

**முதல் காவலன் :** இந்த ஆளைப் பார்த்தால் எனக்குச் சந்தேகமாயிருக்கிறது!

**இரண்டாம் காவலன் :** ஊருக்குப் புதியவன்போல் இருக்கிறது! ஒரு வேளை ஒற்றனாயிருப்பானோ?

**முதல் காவலன் :** அவனிடம் சிறிது பேசிப் பார்த்தால் தெரிந்து போகிறது. ஐயா, நீங்கள் யார்?

**இளந்தத்தன் :** யான் ஒரு புலவன்.

**இரண்டாம் காவலன் :** புலவரா! நல்ல தொழில் தான். 'செய்யுள், செய்யுள்' என்று பித்துப் பிடித்தலையும் இந்த மன்னர்கள் இருக்கும்வரை உங்களுக்கு என்ன குறை! சரி, எங்கிருந்து வருகிறீர்?

**இளந்தத்தன் :** நான்கு நாட்களுக்கு முன் யான் நலங்கிள்ளிபால் சென்றிருந்தேன். அவ்வள்ளலைப் பாடினேன். அவர் இந்த மாணிக்கமாலையைப் பரிசளித்

தார். இப்பொழுது நெடுங்கிள்ளியைப் பார்த்துப் போக வந்திருக்கிறேன்.

இரண்டாம் காவலன்: (முதல் காவலனிடம்) பார்த்தாயா! நம் எதிரி நலங்கிள்ளியிடமிருந்து வந்திருக்கிருன். இவன் ஒற்றனுகத் தானிருப்பான்.

[சேனுதிபதி வருகிருர்.]

சேனுதிபதி: காவலர்களே, இவர் யார்?

முதல் காவலன்: இவர் தம்மை ஒரு புலவர் என்று சொல்லிக் கொள்கிருர். நலங்கிள்ளியிடம் பரிசுபெற்று விட்டு, நம் அரசரைப் பார்க்க வந்திருக்கிருராம்.

சேனுதிபதி: ஐயா, நீங்கள் நலங்கிள்ளியின் பாசறையில் பார்த்த விவரங்கள் என்ன?

இளந்தத்தன்: யான் பாசறையின் விவரங்களைக் கண்காணிக்கவில்லை. நலங்கிள்ளியை மட்டும் பார்த்து விட்டு வந்தேன்.

சேனுதிபதி: இங்கு ஏன் வந்தீர்?

இளந்தத்தன்: அரசர் நெடுங்கிள்ளியைப் பார்த்துப் பரிசில் பெறவே வந்தேன்.

சேனுதிபதி: இங்கே உளவறிந்து நலங்கிள்ளியிடம் கூறுவதற்குத்தானே வந்தீர்?

இளந்தத்தன்: ஐயோ, நான் ஒரு பாவமும் அறியேன்.

சேனுதிபதி: எனக்கு நீர் கூறியதில் நம்பிக்கை இல்லை. உம்மை நம் அரசரிடம் அழைத்துச் செல்கிறேன். அவரிடமே உம் வரலாற்றைக் கூறிக் கொள்ளும்.

[அரண்மனைக்குள் போகிருர்கள்.]

## காட்சி 2

[நெடுங்கிள்ளி அரியணையில் வீற்றிருக்கிறான். பக்கத்தில் சில பிரபுக்கள் அமர்ந்திருக்கிறார்கள். எதிரே சேனாதிபதி நின்று பேசுகிறார்.]

சேனாதிபதி: அரசே! நலங்கிள்ளியிடமிருந்து வந்த ஒருவன் தன்னைப் புலவன் என்று சொல்லிக் கொள்கிறான். ஆனால், அவன் ஒற்றனாயிருக்கக் கூடுமென நான் எண்ணுகிறேன்.

நெடுங்கிள்ளி: அவனை விசாரணை செய்தீர்களா?

சேனாதிபதி: சில கேள்விகள் கேட்டேன். சரியாகப் பதில் சொல்லவில்லை. திருட்டு விழி விழிக்கிறான்.

நெடுங்கிள்ளி: அவனை உள்ளே இழுத்துவரச் செய்யுங்கள்.

[ஒரு காவலன் ஓடிச்சென்று இளந்தத்தனை அழைத்து வருகிறான்.]

சேனாதிபதி: இவன்தான், அந்த ஆள்.

நெடுங்கிள்ளி: (தனக்குள்) சேனாதிபதி கூறியது சரியாகத் தானிருக்கிறது. பார்வையில் கள்ளம் தோன்றுகிறது. (வெளிப்படையாக) நீ இவ்வூருக்கு ஏன் வந்தாய்?

இளந்தத்தன்: வள்ளலே! உங்களுடைய கொடையின் பெருமையைக் கேள்வியுற்ற எந்தப் புலவன்தான் இங்கே வராமலிருப்பான்!

நெடுங்கிள்ளி: கேட்டதற்கு நேர்மையான பதில் கூறும் வழக்கம் ஒற்றனுக்கும் இல்லை, புலவனுக்கும் இல்லை. சரி, நீ ஏன் முதலில் நளங்கிள்ளியைக் காணச் சென்றாய்?

இளந்தத்தன்: ஐயோ, அது ஒரு குற்றமா? அவரும் தங்களைப் போன்ற ஒரு வள்ளல் தாமே!

நெடுங்கிள்ளி: சேனாதிபதி இவன் ஒற்றனாகத்தானிருப்பான். இவனைத் தூக்கிலிட்டு விடுங்கள்!

**இளந்தத்தன்:** ஐயா, நான் செய்த குற்றமென்ன? என்னை யறிந்தவர் இங்கே யாரையும் காணேமே!

[கோவூர்கிழார் வருகிறார்.]

**நெடுங்கிள்ளி:** (எழுந்து) புலவரே, வருக. இந்த ஒற்றனைப் பாருங்கள்.

**கோவூர்கிழார்:** இவரைப் பார்த்தால் ஒற்றனாகத் தோன்றவில்லையே! ஒரு புலவரைப் போலல்லவா தோன்றுகிறார்!

**இளந்தத்தன்:** தாங்கள் கோவூர்கிழார் என்ற பெரும் புலவரென்று யூகிக்கிறேன். நான் இளந்தத்தன் என்ற பெயரினன்; ஒரு புலவன். இவ்வரசரைப் பார்த்துப் பரிசில் பெறலாமென்றும், தங்களைப் பார்த்துப் பேசி மகிழலாமென்றும் எண்ணியே இவ்வூருக்கு வந்தேன்.

**கோவூர்கிழார்:** அரசே! நான் கூறுவதற்குச் சற்று செவிசாய்க்கவேண்டும். பழ மரங்களைத் தேடிச் செல்லும் பறவைகளைப் போன்றவர்கள் புலவர்கள். காடுமேடு பாராது வழித் துன்பங்களைக் கருதாது அவர்கள் வள்ளல்களை நாடிச் சென்று பரிசில் பெறுவார்கள். கிடைத்ததைச் சேர்த்து வைக்காமல், எல்லோருக்கும் வழங்கி மகிழ்வார்கள். பிறருக்குத் தீங்கு நினைப்பதே அவர்கள் வாழ்க்கையில் இல்லை. இவர் ஒற்றரென்று நான் கருதவில்லை; புலவரென்றே நம்புகிறேன்.

**நெடுங்கிள்ளி:** புலவரே, நான் ஆராயாது செய்ய விருந்த கொடுஞ்செயலைத் தவிர்த்து என்னைக் காத்தீர்கள்! இவர் புலவரென்றே இப்பொழுது நான் கருதுகிறேன். இவருக்குப் பரிசுகள் கொடுத்து அனுப்புவேன்.

**இளந்தத்தன்:** என்னையும் என் குடும்பத்தையும் காத்த புலவர் பெருமானே, வணங்குகிறேன்!

| | | |
|---|---|---|
| சந்தேகம் | உளவறிந்து | பெயரினன் |
| பித்துப்பிடித்து | விசாரணை | செவிசாய்க்க |
| மாணிக்கம் | கள்ளம் | வழங்கி |
| பாசறை | வெளிப்படை | ஆராயாது |
| பரிசில் | தூக்கிலிடு | |

## வினாக்கள்

1. இளந்தத்தனைப் பற்றிச் சேனாதிபதி என்ன கருதினார்?
2. நெடுங்கிள்ளி இளந்தத்தனுக்கு என்ன தண்டனை விதித்தான்?
3. கோவூர்கிழார் புலவர்கள் வாழ்க்கையைப்பற்றி நெடுங்கிள்ளியிடம் என்ன கூறினார்?
4. புலவர் உரையைக் கேட்ட அரசன் என்ன செய்தான்?
5. இந்த நாடகத்தை நடித்துக் காட்டுக.

## பயிற்சி

1. ஆ! என்ன அதிசயம்! அவன் ஓ என்று அலறினான்.—இவ்வாக்கியங்களிலுள்ள ஆ, ஓ, என்பன என்ன சொற்கள்? இவை தனியே வருவதில்லை; சொற்களின் இடையே நின்று பொருளைத் தரும். ஆதலால், இவை இடைச் சொற்கள் எனப் படும். இடைச் சொல்லாவது பெயர், வினைச் சொற்களின் இடையே பயின்று வரும் சொல்லாம். இம்மாதிரியே மற்ற, உம், ஏ, ஓ முதலியனவும் இடைச் சொற்களாம்.

2. இது ஒரு தவப் பிஞ்சு—இவ்வாக்கியத்தில், தவ என்பது பிஞ்சின் குணத்தைத் தெரிவிக்கிறது. இவ்வாறு பெயர், வினைகளின் குணத்தை உணர்த்தும் சொல் உரிச் சொல் எனப்படும்.

3. பின்வரும் வாக்கியங்களிலுள்ள இடைச் சொல், உரிச் சொல் இவைகளை எடுத்துக் கூறுக:

தீவினை அகற்று.
அவன் சால உழைக்கிறான். (சால=மிக)
பாம்பு புஸ் என்று சீறுகிறது.
மழை சோ என்று பெய்கிறது.

# 33. தேசிங்கு ராசன் கதை

[டில்லி பாதுஷாவிடம் ஒரு பக்கிரி கொண்டுவந்து கொடுத்த குதிரையை அடக்க முன்வந்த செஞ்சிக்கோட்டை தேரணி மகா ராசன் முதலியோர் அதனை அடக்க முடியாமையினால் சிறைப் பட்டனர். பின்னர் தேரணி மகாராசன் குமாரன் தேசிங்கு ராசன் டெல்லி சென்று அக்குதிரையை அடக்கினான்.]

## தேசிங்கு ராசன் குதிரையை அடக்க அதன்மீது ஏறுதல்

ஐயா கேளுமையா கேளும் என்னைப் பெற்ற ராசாவே
குதிரையைப் பார்த்து பயப்பட்டு நீங்கள் சிறையிருந்தீர்
பாராசாரியைப் பார்த்து பயப்பட்டு பாரசிறையிருந்தீர்
ஏறிச் சவாரி செய்துமே நான் இட்டுப்போகின்றேன் பார்
குதிரையேறி சவாரிசெய்து கொண்டு போவே
னென்றான்.
சற்று நேரத்தில் சவாரி செய்து சிறைமீட்டுப் போறேன்
போகாமற் போனாலுன் வயிற்றில் பிறந்ததென்னதிற்கு?
அவ்வார்த்தை காதிலேகேட்டு அலறிவிழுந்தாராம்.
கனைத்துக்கதும்பி வெளியில் வந்தான் காளைசிங்கம்
போல
குதிரையிருக்குங் கொட்டடிதேடிக் குதித்தோடி வந்தான்.
ஓடிவருகிற ராசரைக் கண்டு உதும்பியெழுந்ததுபார்!
கோட்டையிடிந்து விழுந்தாற்போல குலுங்கக் கனைத்தது
நாற்றிசையிலுங் கலங்கியங்கே நடுக்கங் கொண்டதுபார்!
ஐம்பத்தாறு தேசராசாக்கள் அதிர்ந்து விழுந்தார்கள்;
குழந்தை குழந்தை யென்று சொல்லிக் கூவியழுதார்கள்;
டில்லிபதுரை தேரணிராசனும் திகைத்து விழுந்தார்கள்;
விழுந்தவுடனே குழந்தையென்று தேடியே வாருர்கள்
கனைத்த குதிரையைக் கண்டு கடுக ஓடிவந்தான்.

குதிரையைத் தட்டி சலாம் வாங்கினான் கொல்லுஞ்
சிங்கம்போல ;
அண்ணுவாடா தம்பிவாடா மோவுத்துக்காரா நீ
கால்கயிற்றை கழுத்துக்கயிற்றை கடுகஅவிழுமென்ருன்.
அந்தச் சொல்லைக் காதிலே கேட்டான் மோவுத்துக்
காரனும்
சொன்னவுடனே சல்திபாய்ந்து சுருக்காயெழுந்தானும்
தங்கத்தாலே சீனி போட்டுத் தடவிக் கொடுத்தானும்
அந்தக் குதிரையைக் கண்ணுலே கண்டு அகமுமகிழ்ந்
தானும் ;
அரிபரந்தாமாவென்று அலறியெழுந்தானும்
கோவிந்த ஸ்ரீ கிருஷ்ணுவென்று கும்பிட்டெழுந்தானும் ;
பாராசாரியை சலாம் வாங்கிப் பாய்ந்தேறினனும்
புலிக்குட்டி போல பாய்ந்தவனும் புரவியேறினனும்.
ஏறினவுடனே பாராசாரி யென்னசெய்தது பார் !
தடதடவென்று தவிக்குதுபார் அந்தகுதிரைதானும்
லகானிழுத்துக் கையிலேபிடித்தான் ராசாதேசிங்கு.
ஐயா கேளுமையா கேளுமென்னைப் பெற்றவரே
தப்பித்தவறி வந்தேனுனல் தழுவிக் கொள்ளுமையா
இன்றைக்குஞ்சாவு நாளைக்குஞ்சாவு இருக்குது
தலைமேலே
ஒன்றுக்கும் நீ அஞ்சவேண்டாம் உறுதி கொள்ளுவீரே !
சொன்ன சொல்லைக் காதிலே கேட்டார் தேசராசாக்கள்
ஐம்பத்தாறு தேசராசரு மடங்கலுங் கேட்டார்கள்.
மகனேயென்ன செய்வோமென்று வயிற்றைப்
பிசைந்தார்கள்
போகாதே போகாதே மகனே புரவி கொண்டுபோமே !
இவ்வுலகத்துப் புரவியல்லவே எந்தன் கண்மணியே
உயிருடனுன்னைப் பிரிந்துவிட்டு உலகத்திலிருப்போமா ?

பிறந்த போதே யிறந்து போனால் பெரிய துக்கமில்லை.
ஐந்துவருடம் வளர்த்தமாதா அலைந்துமே போவாள்
குதிரையை விட்டுக் குதித்துவாடா குழந்தை
யென்மகனே!
என்னுயிர் பூமியில் தரித்திருக்க யிறங்கிவாமகனே!
அம்மொழியைக் காதிலே கேட்டானதிரூப தேசிங்கு
கலகலவென்று சிரித்தானையா கதும்பும் புலிபோல
இங்கேயிருந்தா லென்னகவலை என்னவாகுமோ தான்
கோவிந்தா கோவிந்தா வெனக் குதிரையைத் தட்டி
விட்டார்.

## குறிப்புரை

கிராம மக்கள் பொதுவாக ஓசை நயத்தை மட்டும் கருதி எளிய பாடல்களை விரும்பிக் கேட்கின்றனர். அவர்களுக்குச் செய்யுளமைதி யாப்பிலக்கண அமைதி இவையெல்லாம் வேண்டுவ தில்லை. ஆதலால், அவர்கள் விருப்பத்திற்கிணங்கச் சென்ற இரண்டு மூன்று நூற்றாண்டுகளில் சில பாடல்கள் தோன்றின. அவைகள் தாம் புரந்தரன் களவு, அல்லி அரசாணி மாலை, பவளக்கொடி மாலை, தேசிங்கு ராசன் கதை, கட்டபொம்மன் கதை முதலியன. அவற்றின் ஆசிரியர்கள் இன்னாரெனக் கூறு வதற்கில்லை. அவர்கள் புலமையுடையவர்களும் அல்லர். ஆயினும், ஓசையே முதன்மையாகக் கருதி எளிய நடையில் பேச்சுத் தமிழில் பாடிப் பொதுமக்களின் மனதைக் கவர்ந்துள்ளனர்.

பாரசிறை - கடுங்காவல். இட்டு - அழைத்து. கொட்டடி - அறை; இங்கே குதிரை கட்டுமிடம். கடுக - விரைந்து. மோவுத் துக்காரன் - தேசிங்கு ராசனின் உயிர் நண்பன். சீனி - சேணம். புரவி - குதிரை. கதும்பும் புலி - உறுமும் புலி.

## 34. கட்டபொம்மன் பாடல்

### (பாதர்வெள்ளை சண்டை)

[கட்டபொம்மு துரையிடமிருந்து, சண்டைக்கு வரும்படி ஓலை வந்திருப்பதைக் கண்டு பாதர்வெள்ளை தன் மனைவி வெள்ளையம்மாளிடம் விடைபெற்றுக் கொண்டு கட்டபொம்முவுக்குத் துணையாக ஆங்கிலேயரை எதிர்த்துச் சண்டை செய்யப் புறப்படுகிறான்.]

**பாதர்வெள்ளை சண்டைக்குப் புறப்படுதல்**

திரளை சோறு கொடுத்து வளர்த்திட்ட,
  செகவீரபாண்டிய னூமத்துரை
அப்பனழைக்கிரு ரென்றுசொல்லி,
  ஆங்கார கோபமாய் என்ன செய்தார்?
பிள்ளைபோல் வந்தவன் சுந்தரலிங்கம்,
  பேய்க்குதிரைச் சீனிவையடா
எவ்வித துன்பங்கள் வந்திடுமோ,
  என்மனம் நோகுதே சுந்தரலிங்கம்!
5 சண்டைக்கு வந்தவன் காலன் துரை,
  சாகத்துணிந்தவன் பாதர்வெள்ளை
சீவி நல்ல மயிர்முடித்தார்,
  சிங்காரக் கொண்டையும் தானுமிட்டார்
கோணத்தலைப்பாவுந் தானுங் கட்டி,
  குச்சு உருமாலுஞ் சுங்குவிட்டார்;
கச்சை நல்ல வரிந்து கட்டி,
  கருங்கச்சையும் சுங்குவிட்டார்
கத்தி நல்ல இடையிலிட்டார்,
  கண்டாக் கோடாலி தோளிலிட்டார்.
10 ஈட்டி நல்ல சமுதாடு,
  இடது கையில் வங்குசமும்
பட்டாக்கத்தியைத் தானெடுத்து,
  பாங்குடன் வாரானும் பாதர்வெள்ளை

கட்டுமெட்டாகப் பொட்டுமிட்டு,
கண்ணுடி பார்த்து உருமால்கட்டி
கட்டக் கருப்பண்ணன் சுந்தரலிங்கம்,
காரணமாகவே ரெண்டு பேரும்
பேய்க் குதிரையின் மேலேறி,
பேராப்பட்டியாம் பாதைவழி,
15 வையாளி போடுதாம் முத்துவர்ணம்
வாரிஎறியுதாம் பேய்க்குதிரை
ஒட்டாரங்காடு வுடங்காடு
ஓடிவருகுதாம் பேய்க்குதிரை ;
சில்லரைக்காடு செடிக்காடு,
சிட்டாய்ப் பறக்குதாம் பேய்க்குதிரை ;
சின்னஞ்சிறு கற்களெல்லாம்
செந்தூள் பறக்குதாம் முன்னுலே ;
முன்னுலே ரெண்டடி பாயுதுபார்
பின்னுலே ரெண்டடி தாவுதுபார்.
20 காடுசெடிமலே தான்கடந்து
கடுகிப் போரானும் பாதர்வெள்ளே
கட்டுக் கடங்காத பாதர்வெள்ளே,
காவலன் குதிரை போகுதுபார்
பறக்கின்றதோர் பட்சிபோல,
பறந்து போகுதாம் பேய்க்குதிரை ;
மூடினகண்ணு முளிக்கு முன்னே
மூன்றுமைல் தூரம் போகுதுபார் !
ஒட்டப்பிடாரத்தை நேர் பிடித்து
ஓடிவருகுதாம் பேய்க்குதிரை ;
25 பாரமலேபோல ரெண்டுபேரும்
பாஞ்சாலி நாட்டையும் கண்டுவிட்டார் ;
குதிரையை விட்டுமே தானிரங்கி,
கொடுமுடியானவன் பாதர்வெள்ளே ;

பட்டாக்கத்திக்கி யஞ்சாத,
படுபாவியானவன் பாதர்வெள்ளை
மறவர்குலத்துதித்தவனும், மன்னவன்
வெள்ளையன் என்ன செய்தான் ?
கட்டபொம்முதுரை பேருசொன்னால்,
காகம் பறக்காதாம் பாஞ்சையிலே.
30 ஊமத்துரை யென்று பேரு சொன்னால்
ஊக்கம் பிறக்குமாம் பூமியிலே.
நித்திய கல்யாண மேடையிலே,
ரத்தினம் நாற்காலி தானும்போட்டு
பாங்குடனே பட்டுதிண்டு வைத்து,
முல்லையினா லொரு செண்டுவைத்து
இருந்து அரசாட்சி செய்கிறாராம்,
எங்கள் கட்டபொம்மேந்திர துரை
இப்படியரசாட்சி செய்தவர்க்கு
இடுக்கம் நேர்ந்ததைச் சொல்லுகிறேன்.

**சென்னையிலிருந்து காலன் துரை சோல்ஜர் பட்டாளங்களுடன் சண்டைக்குப் புறப்படுதல்**

35 ராணுவம் பேசுரான் கட்டபொம்மு,
ராணியம்மாளுள்ள நாளையிலே
காகம் பறக்காத தேசமெல்லாம்,
கண்டுபிடித்தவன் காலன் துரை
சிட்டுபறக்காத தேசமெல்லாம்
தேடிப்பிடித்தவன் காலன்துரை
" கட்டனைப் பிடித்துத் தூக்காவிட்டால்,
காலன்துரை யென்றிருக்கலாமோ ?
ஊமத்துரையைப் பிடிக்காவிட்டால்
உயர்ந்த சம்பளம் வாங்குவேனோ ?"

40 ஐநூறு தோட்டாவும் வாங்கிக்கொண்டு
ஆங்காரமாகவே காலன் துரை
துருப்புக்குதிரை தன்னுடனே
சோல்ஜர்பட்டாளம் ஐநூறுமே
சோல்ஜர்பட்டாளம் கொண்டுவாரார்;
துருக்கிப் பட்டாளம் கொண்டு வாரார்.
கூடாரடேராக்கள் நூறுகளும்
குண்டுமருந்துகள் வாங்கிக்கொண்டு
மரம்பிடிங்கிச் செடிபிடிங்கி,
மன்மதனென்றொரு பீரங்கியாம்;
45 அடுக்குப் பானை திடுக்கிடுமாம்
அங்கதனென்றொரு பீரங்கியாம்;
வம்பனுடன் சண்டை செய்யவென்று
வாகுடன் பட்டாளம் கொண்டுவாரார்.
வாருங்கள் வாருங்கள் பட்டாளங்கள்,
வரிசையாகவே என்பிறகே
சென்னைப் பட்டணம் தான்கடந்து,
செங்கல்பட்டு வாரார் பட்டாளங்கள்;
செங்கல்பட்டு ஜில்லாதான் கடந்து,
தேடியே வந்தார் வெளிப்புறமும்
50 வெளிப்புறமும் விட்டகன்று
விரைவுடன் வாராராம் பட்டாளங்கள்.

### குறிப்புரை

தேசிங்கு ராசன் கதைக்கு எழுதிய குறிப்புக் கட்டபொம்மு கதைக்கும் பொருந்தும்.

திரளை - உருண்டை. திரளைச் சோறு - மிக்க சோறு. கண்டர்கோடாலி - ஒருவகையாகப் பிளக்கும் கோடாலி. வங்குசம் - அங்குசம். காவலன் - அரசன். ஒட்டப்பிடாரம் என்பது ஓர் ஊர். காலன் துரை - ஆங்கிலேயர் படைத்தலைவன். கட்டன் - கட்டபொம்மன். வெளிப்புறம் - விழுப்புரம்.

## 35. நல்வழி

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா. (1)

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராஞலும்
இல்லையென மாட்டார் இசைந்து. (2)

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. (3)

ஆன முதலில் அதிகஞ் செலவாஞல்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்வஞய் ஏழ்பிறப்பும் தீயஞய்
நல்லார்க்கும் பொல்லஞம் நாடு. (4)

ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்ருகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல். (5)

மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமிங் கில்லை—சுரந்தமுதம்
கற்ரு தரல்போல் கரவா தளிப்பரே
உற்ரு ருலகத் தவர். (6)

ஆறிடு மேடும் மடுவும்போல் ஆம்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து. (7)

கல்லானே யானாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாரும் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல். (8)

பூவாதே காய்க்கும் மரமும் உள மக்களுளும்
ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலும் நன்றாகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலும் தோன்றா துணர்வு. (9)

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும். (10)

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர். (11)

—ஔவையார்

குறிப்புரை

நல்வழி என்பது நல்ல வாழ்க்கை நெறிகளைத் தெரிவிக்கும் நூல் என்று பொருள்படும். ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய நூல்களை இயற்றிய ஔவையாரே இந்நூலையும் செய்தவராவர்.

1. பால் தேன் பாகு பருப்பு ஆகிய இந்நான்கு பொருளையும் கலந்து நான் உனக்குத் தருகிறேன்; அவற்றிற்கு ஈடாக நீ சங்கத் தமிழ் மூன்றை மட்டும் கொடுத்தால் போதுமென விநாயகரை ஔவையார் சாதுரியமாக வேண்டுகிறார். கோலம் செய் - அழகு பொருந்திய. துங்கம் - உயர்வு. கரிமுகம் - யானை முகம்.

2. ஊற்றுப் பெருக்கு - ஊற்றினால் பெறும் நீர். உலகு ஊட்டும் - உலகத்தாரை உண்பிக்கும். நல்கூர்ந்தாரானாலும் - ஏழைகளாக ஆயினும்.

3. அரசறிய வீற்றிருந்த வாழ்வு - பெரு வாழ்வு. ஏற்றம் - உயர்ந்தது. கண்டீர் - அசை நிலை.

4. ஆனமுதல் - தனக்கென ஏற்பட்ட முதற் பணம். மதி - அறிவு. கள்வன் - கள்ளன். ஏழ்பிறப்பு - எழுவகைப் பிறப்பு: தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம். நாடு - ஆராய்ந்து பார்.

5. ஒன்றாகும் - வேறொன்று ஆகும். நிற்பினும் நிற்கும் - தோன்றினும் தோன்றும்.

6. கற்றா - கன்றையீன்ற பசு: கன்று + ஆ = கற்றா. கரவாது - ஒளிக்காது.

7. ஆற்றில் அவ்வப்போது மாறி மாறித் தோன்றும் மேடும் மடுவும் போலச் செல்வம் ஒரேயிடத்தில் நில்லாமல் மாறி மாறி வரும். ஆதலால், செல்வம் நிலைபெற்றதன்று என்பதை எண்ணிப் பசித்தோர்க்குப் பிச்சையிடுவீராக. அதனால் உள்ளத்தின் தன்மை சிறப்படையும் என்றபடி. சார்பு - துணை. உள் + நீர்மை = உள்ளத்தின் தன்மை. வீறும் - மேன்மையுறும்.

8. கல்லான் - படிக்காதவன். இல்லான் - பொருள் இல்லாதவன். இல்லாள் - மனைவி. ஈன்றுஎடுத்த - பெற்று வளர்த்த.

9. பூவாது காய்க்கும் மரம் - அத்தி, ஆல் முதலிய மரங்கள். ஏவாதே நின்று உணர்வார் - பிறர் ஏவாமலே தாமே ஆராய்ந்து உணர்பவர். தூவா விரைத்தாலும் - தூவி விதைத்தாலும். வித்து - விதை. பேதை - மூடர்.

10. மாண்டவர் மீளார்; நமக்கும் அது பொருந்தும். எமது நிலை நல்ல நிலையாக வேண்டுமெனக் கருதி இறுதிவரை ஐயமிட்டு உண்டு வாழ்வீராக.

11. திருக்குறள், வேத உபநிடதமும், தேவாரம், பிரமசூத்திரம், திருக்கோவையார், திருவாசகம், திருமந்திரம் ஆகிய இவை யாவும் வெளியிடும் கருத்துக்கள் ஒன்றுபட்டவையே; ஆகையால், இவற்றுள்ளே வேறுபாடு காணுதல் வேண்டாம் என்றபடி. தேவர் - திருவள்ளுவர். நான்மறை முடிபு - வேத அந்தம். மூவர் தமிழ் - அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய தேவாரம். முனி - வியாச முனி. கோவை - திருக்கோவையார். திருக்கோவையார், திருவாசகம் இவை மாணிக்கவாசகர் பாடியவை. திருமூலர் சொல் - திருமந்திரம்.

# 36. நீதி வெண்பா

மென்மதுர வாக்கால் விரும்புஞ் சகம்கடின
வன்மொழியி னாலிகழும் மண்ணுலகம்—நன்மொழியை
ஓதுகுயில் ஏதங் குவியது கர்த்தபந்தான்
ஏதபரா தஞ்செய்த தின்று. (1)

வாக்கு நயத்தாலன்றிக் கற்றவரை மற்றவரை
யாக்கைநயத் தாலறிதல் ஆகாதே—காக்கைபொரு
நீலச் சிறுகுயிலை நீடிசையா லன்றியே
கோலத் தறிவருமோ கூறு. (2)

சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர் ஆன்ற
முற்றுணர்வோ ரொன்றும் மொழியாரே—வெற்றிபெறும்
வெண்கலத்தி னோசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தின் உண்டோ ஒலி. (3)

பொன்னுங் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
சிற்குணமே தோன்றும் சிறந்து. (4)

கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினும்நூல்
வல்லா னொருவனையே மானுவரோ—அல்லாரும்
எண்ணிலா விண்மீ னிலகிடினும் வானகத்தோர்
வெண்ணிலா வாமோ விளம்பு. (5)

தாமரை பொன்முத்துச் சாமரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா—தாமழல்மற்(று)
எங்கே பிறந்தாலும் எள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என். (6)

ஈக்குவிடந் தலையில் எய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனருக்
கங்கமுழு தும்விடமே யாம். (7)

பாலினீர் தீயணுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலும்நீர் கண்டமையும் மேன்மைபோல்—நூலினெறி
உற்றோர் இடுக்கண் உயிர்கொடுத்தும் மாற்றுவரே
மற்றோர் புகல மதித்து. (8)

ஈசனெதிர் நின்றாலும் ஈசனருள் பெற்றுயர்ந்த
நேசரெதிர் நிற்பதரிதாமே—தேசுவளர்
செங்கதிர்முன் நின்றாலும் செங்கதிர் வன்கிரணம்
தங்குமணல் நிற்பரிதே தான். (9)

பெண்ணுதவுங் காலைபிதா விரும்புங் கல்வியே
எண்ணில் தனம்விரும்பும் ஈன்றதாய்—நண்ணிடையில்
கூறியசுற்றம் குலம்விரும்பும் காந்தனது
பேரழகு தான்விரும்பும் பெண். (10)

—ஓர் செந்தமிழ்ப் புலவர்.

## குறிப்புரை

**நீதி வெண்பா:** வெண்பா என்பது ஒருவகையான செய்யுள். நீதிவெண்பா என்பது நீதிகளைத் தெரிவிக்கும் வெண்பாக்களால் ஆகிய ஒரு நூல். நீதிவெண்பா நூறுபாக்களால் ஆகியது. ஆயினும், இப்பொழுது அந்நூல் முழுதும் கிடைப்பதில்லை.

**நீதி வெண்பாவின் ஆசிரியர்:** சிறந்த தமிழ்ப் புலவராக இருக்கவேண்டும். அவரைப்பற்றிய வேறு விவரம் தெரியவில்லை.

1. மதுரவாக்கு - இனியசொல். சகம் - பூமியிலுள்ள மக்கள். மண்ணுலகம் - உலகத்தார். கர்த்தபம் - கழுதை. அபராதம் - குற்றம்.

2. வாக்கு நயம் - சொல்லின் இனிமை. கற்றோர், கல்லாதார் என்பது உடலமைப்பால் அறிதல் ஆகாதது. ஆனால் வாக்கு நயத்தால் அறியக் கூடியது.

3. சிலுசிலுப்பர் - இரைச்சிலிடுவார். ஆன்ற - நிறைந்த. ஒண்கலம் - ஒளிபொருந்திய ஆபரணம்.

4. சின்னம் பட - சிதையுமாறு.

5. மானுவரோ - ஒப்பாவரோ; ஆகார். அல் - இருள். விண்மீன் - நட்சத்திரங்கள்.

6. சாமரம் - வெண்சாமரம்; கவரி என்னும் ஒருவகை மானின் உரோமம். கோரோசனை - மாட்டு வயிற்றிலிருந்து கிடைக்கும் ஒருவகை மருந்துப் பொருள். புனுகு சவ்வாது இவை யிரண்டும் ஒவ்வொருவகைப் பூனையின் உடம்பிலிருந்து கிடைக் கும் வாசனைப் பொருள்கள். அழல் - நெருப்பு. பொருள்கள் பிறப்பினுலன்றிச் சிறப்பினுல் மதிக்கப்படும் என்க.

7. துர்ச்சனர் - தீயோர். தீயவர்களோடு எந்நிலையிலும் சேர்தல் கூடாது.

8. பால் காய்ச்சும்பொழுது சிறிது தண்ணீர்விட்டுக் காய்ச் சுவார்கள். அப்பொழுது பால்பொங்கி வழியும். அது கண்டு பாலில் நீரைத் தெளிப்பார்கள். உடனே பொங்குதல் அடங்கி விடும். இந்த இயற்கை நிகழ்ச்சியைக்கொண்டு மேலோர் மற்ற வருக்கு உதவி செய்தல் விளக்கப்படுகிறது. அணுக - நெருங்க. இடுக்கண் - துன்பம். புகல - பேச.

9. வெயிலில் அதை ஓரளவு பொறுத்துக்கொண்டு நிற்க லாம். ஆனுல், வெயிலேறிய மணலில் சிறிது நேரங்கூட இருத்த லாகாது. அதுபோல் ஈசனுக்குப் பிழை செய்தாலும் அதனின்று தப்பலாம்; ஆனுல், ஈசனடியார்க்குப் பிழைசெய்தால் அதனின்று தப்புதல் அரிது என்றபடி. நேசர் - அன்பர். தேசு - ஒளி. செங் கதிர் - சூரியன்.

10. ஒரு பெண்ணுக்கு மணமகன் தேடுங்கால் அப்பெண் ணின் தந்தை மணமகன் கல்வியுடையவனுக இருக்கவேண்டும் என்பான்; தாய் மணமகன் செல்வம் உடையவனுக இருக்க வேண்டும் என்பாள்; சுற்றத்தார் அவன் தம் குலத்தைச் சேர்ந் தவனு எனக் கவனிப்பார். மணமகளோ தனது கணவன் மிக்க அழகுடையவனுக இருத்தல் வேண்டும் என்பாள்.

# 37. சதகச் செய்யுள்

## 1. அறப்பளீசுர சதகம்

### வேண்டத் தக்கவை

வாலிபந் தனில்வித்தை கற்கவேண் டும்கற்ற
வழியிலே நிற்க வேண்டும்;
வளை கடல்திரிந்துபொருள் தேடவேண்டும் தேடி
வளர்அறம் செய்யவேண்டும்;
சீலமுடை யோர்களைச் சேரவேண்டும் பிரிதல்
செய்யா திருக்கவேண்டும்;
செந்தமிழ்ப் பாடல்பல கொள்ளவேண்டும் கொண்டு
தியாகம் கொடுக்க வேண்டும்;
ஞாலமிசை பலதருமம் நாட்டவேண்டும் நாட்டி
நன்ருய் நடத்தவேண்டும்;
நம்பன்இணை யடிபூசை பண்ணவேண்டும் பண்ணி
ஞலும்மிகு பக்திவேண்டும்;
ஆலமமர் கண்டனே பூதியணி முண்டனே
அநகஎம தருமை மதவேள்
அனுதினமும் மனதில் நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே!

—அம்பலவாணக் கவிராயர்

### குறிப்புரை

சதகம் என்பது நூறு பாடல்கள் கொண்ட ஒருவகை நூல். சதம் - நூறு. சதகச் செய்யுட்கள் பலபல அரிய நீதிகளைக் கூறுவன. ஏறத்தாழ நூற்றைம்பது ஆண்டுகளுக்குமுன் சதகங்கள் பல தோன்றின. அவை அறப்பளீசுர சதகம், குமரேச சதகம், திருவேங்கட சதகம் முதலியன. இவற்றில் ஒவ்வொரு பாடலிலும் இறுதியடியின் இறுதிப் பகுதி ஒரே வகையாக முடியும்.

அறப்பளீசுர சதகம் என்பது அறப்பள்ளி என்னும் தலத்தில் (சதுரகிரியில்) கோயில் கொண்டருளும் சிவபிரானை முன்னிலைப்படுத்திக் கூறுவதாகும். அறப்பள்ளி என்பது

கொல்லிமலையைச் சார்ந்தது; நாமக்கல்லிலிருந்து ஏழாவது மைலில் உள்ளது.

இந்நூலாசிரியர் அம்பலவாணக் கவிராயர். இவர் இராம நாடகம் பாடிய அருணுசலக் கவிராயரின் மூத்த புதல்வர் என்பர்.

வேண்டத் தக்கவை - நம்மால் விரும்பத் தக்கவை. வாலிபம் - இளமைப் பருவம். கற்றவழியிலே நிற்றல் - கற்றவாறு ஒழுகுதல். வளை கடல் - பூமியைச் சூழ்ந்துள்ள கடல். அறம் - தருமம். சீலம் - நற்குணம். செந்தமிழ் - நல்ல தமிழ். தியாகம் - ஈதல்; வறியோர்க்குக் கொடுத்தல். ஞாலம் - பூமி; ஞாலமிசை - பூமியில். நம்பன் - கடவுள்; விரும்பத் தக்கவன். இணைஅடி - இணைந்த அடி; அஃதாவது இரண்டடிகள். பத்தி - அன்பு. ஆலம் அமர் கண்டன் - விடம் பொருந்திய கழுத்தை யுடையவன். பூதி அணி முண்டன் - திருநீறணிந்த நெற்றியை உடையவன். அநகன் - குற்றம் அற்றவன்.

## 2. திருவேங்கட சதகம்

### கல்விப் பொருட்சிறப்பு

தெள்ளமுத மனையகல் விப்பொருள் படைத்திடில்
தேசமெல் லாந்துதிக்கும்;
சயத்தம்ப மானபுகழ் நிலைநிற்கு மிவையெலாம்
செம்பொன்மிகு செல்வமதுபோல்
வெள்ளமது கொளுமென்னும் பயமில்லை களவினுல்
வெம்பவரு சலனமில்லை;
வேந்தரால் பறித்திடக்கூடாது சோதரர்
விரும்பினும் பங்குருது;
கள்ளரால் திருடவும் முடியாது வரவரக்
கனமலாற் குறைவுருது;
கருணை ஞானந்தழையு மாகையா லுனையிதய
கமலத்தில் வைப்ப தெளிதாம்;
வள்ளலென வருகின்ற மாடபூ சியாதிபன்
மணவாள நாராயணன்
மனதிலுறை அலர்மேலு மங்கைமணவாளனே
வரதவேங் கடராயனே!

### குறிப்புரை

இந்நூலுக்கு 'மணவாள நாராயண சதகம்' எனவும் பெயர் வழங்குகிறது. 'ஓமலூர் வேங்கை பூபன் உதவும் மணவாள நாராயணன் களமூரில் உலகநீதி கேட்க' என இந் நூலின் தனியனில் இருத்தலால், மணவாள நாராயணன் என்பவர் இதனை ஆக்கியோராகவோ ஆக்குவித்தோராகவோ இருக்கவேண்டும் என்று ஊகிக்கப்படுகின்றது. இது ஒவ்வொரு செய்யுளும் 'வரதவேங்கட ராயனே' என 'முடிதலால் திருவேங்கட சதகம்' எனப் பெயர் அமைந்ததாகும்.

'தெள்ளமுதம்' என்னும் இச்செய்யுள் கல்வியின் சிறப்பை எடுத்துக் கூறுவது. 'வெள்ளத்தாற் போகாது' எனத் தொடங் கும் பாடலொன்றும் இக்கருத்துக்களை உடையதாகக் காணப்படு கின்றது. தெள்அமுதம் - தெளிந்த தேவாமிர்தம். தேசம் எல் லாம் துதிக்கும் - நாட்டில் உள்ள எல்லாரும் துதிப்பர். சயத்தம் பம் - வெற்றிக் கம்பம். கொளும் - கொள்ளும். சலனம் - மனக் கலக்கம். பறித்து - வலிந்து பிடுங்க. சோதரர் - சகோதரர்; உடன்பிறந்தோர். கனம் அலால் குறைவுருது - வளருமேயன்றிக் குறையாது. இதய கமலம் - தாமரைப் பூப்போன்ற உள்ளம். மாடபூசி - ஓர் வைணவ பரம்பரை. 'அலர்மேலு மங்கை' என்பது திருப்பதியில் மலை அடிவாரத்திற் கோயில் கொண்ட ருளும் தாயாரின் பெயர்.

## 3. குமரேச சதகம்

### பிதாக்கள்

தவமது செய்தேபெற் றெடுத்தவன் முதற்பிதா
　　　தனைவளர்த் தவனொரு பிதா
　தயையாக வித்தையைச் சாற்றின வனொருபிதா
　　　சார்ந்த சற்குரு வொரு பிதா;
அவமறுத் தாள்கின்ற அரசரொரு பிதா நல்ல
　　　ஆபத்து வேளை தன்னில்
　அஞ்சலென் றுற்றதுயர் தீர்த்துளோன் ஒரு பிதா
　　　அன்புள முனோன் ஒரு பிதா;

கவளமிடு மனைவியைப் பெற்றுளோன் ஒருபிதா
கலிதவிர்த் தவன் ஒரு பிதா
காசினியி லிவரை நித்தம் பிதா என்றுளங்
கருதுவது நீதி யாகும் ;
மவுலிதனில் மதியரவு புனைவிமலர் உதவுசிறு
மதலையென வருகுருபரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே !

—குருபாததாசர்

## குறிப்புரை

இந்நூலின் ஒவ்வொரு செய்யுளும் 'குமரேசனே' என முடிதலால் இதற்குக் 'குமரேச சதகம்' என்று பெயர் வழங்குகிறது. சோழநாட்டில் புதுக்கோட்டையை அடுத்துள்ள திருப்புல்வயல் என்னும் தலத்தில் மலைமீது கோயில்கொண்டுள்ள குமரேசனை முன்னிலைப்படுத்திப் பாடப்பெற்றது. இந்நூல். குமர + ஈசன் = குமரேசன். குமரேசன் - முருகக் கடவுள்.

இந்நூலின் ஆசிரியர் குருபாததாசர் என்பவர். இவர் 150 ஆண்டுகட்குமுன் வாழ்ந்தவர் என்பர்.

பிதாக்கள்: இச் செய்யுளில் இன்னின்னர் பிதாவுக்கு ஒப்பானவர் எனக் கூறியுள்ளார். முதற்பிதா - முதன்மையான பிதா; அதாவது பெற்றெடுத்த பிதா. தயை - கிருபை; அருள். வித்தையைச் சாற்றினவன் - கல்விகற்பித்த ஆசிரியர். சற்குரு - ஞானமார்க்கத்தைப் போதிக்கும் ஆசாரியர். அவம் அறுத்து ஆள்கின்ற அரசு - குற்றம் நேராதபடி ஆளுகின்ற அரசன். அஞ்சல் - அஞ்சாதே. முனோன் - முன்னோன்; தமையன். கவளம் - சோற்றுத் திரளை. கலி - வறுமை. தவிர்த்தவன் - நீக்கினவர். காசினி - பூமி. நித்தம் - எந்நாளும். மௌலி - தலைமுடி. மதி - சந்திரன். அரவு - பாம்பு. புனை - அணிந்த. விமலர் - குற்றமற்ற சிவபிரான். உதவு - பெற்ற. சிறு மதலை - சிறு குழந்தை. இச் செய்யுளில் பெற்ற பிதாவைத் தவிர மற்றைய பிதாக்கள் எண்மர் கூறப்பட்டிருத்தல் காண்க.



